

மே, 1989

# ஸப்தகிரி

விலை ரூ. 1/-

திருமலை திருப்பதி தேவஸ்தான சமய மாத இதழ்



**மன்மனா பவ மத்பக்தோ மத்யாஜீ மாம் நமஸ்குரு |**
**மாமேவைஷ்யஸி ஸத்யம் தே ப்ரதிஜானே ப்ரியோ஽ஸி மே ||**

என்பால் மனம் வைத்து என்னிடம் பக்தி பூண்டு என்னை ஆராதித்திடுவாய். என்னை வணங்கு, என்னையே அடைவாய். உனக்கு உறுதி கூறுகிறேன். எனக்கினியான் நீ.

**—ஸ்ரீமத் பகவத்கீதை - 18-65**

மே 1989

# ஸப்தகிரி

தனிப்பிரதி ரூ. 1
வருடச் சந்தா ரூ. 12

மலர் 19
இதழ் 12

## உள்ளுறை



### அட்டைப்பட விளக்கம்

முன்னட்டை மற்றும்
2-வது உள்அட்டைகளில் : சித்திரங்கள்: கே. ஜகதீஷ்.
முதல் உள் அட்டையில் . ஆதிசங்கரர்-சித்திரம் என். தத்.
பின்னட்டையில் : ஸ்ரீ ஆஞ்சநேயர்:
சித்திரம். ஏ. ராமசந்திரய்யா.

சிறப்பாசிரியர்
திரு. சிஎச். வெங்கடபதிராஜு
I.A.S.,
செயலாட்சித் தலைவர்,
தி.தி.தேவஸ்தானம், திருப்பதி.

அச்சிடுபவர்
திரு. எம். விஜயகுமார் ரெட்டி,
மேலாளர்,
தி.தி. தேவஸ்தான அச்சகம்,
திருப்பதி.

ஆசிரியர்
திரு. கே. சுப்பாராவ், எம்.ஏ

துணையாசிரியர் :
திரு. என். எஸ். ராமமூர்த்தி, எம்.ஏ.,

பிரதிகளுக்கு :
EDITOR,
" Sapthagiri "
T. T. Devasthanams,
TIRUPATI.





# உங்களுடன் . . . .

ஓர் ஆண்டின் எல்லா நாட்களுக்கும், இவை நல்லன பயக்கும்—இவை ஒதுக்கத்தக்கன—என முக்கியத்துவம் அளித்திடும் ஒரே சமயம் நமது இந்து சமயமேயாகும். இவ்வகையில் பெரும்பாலான நாட்களுக்கு நாம் சமயம் மற்றும் ஆன்மீக ஏற்றம் அளித்துப் பல பெயர்களில் பல விழாக்களைக் கொண்டாடி வருகின்றோம். இறைவன், அவனுடைய அவதாரங்களாகவோ அம்சமாகவோ அழைக்கப்படும் சமயத் தலைவர்கள், அவர்கள் வழிவரும் சமயத் தொண்டர்கள், மற்றும் தேசியத் தலைவர்கள் ஆகியோரின் திருஅவதார நாட்களை ''ஜெயந்தி'' எனும் பெயரில் பல விழாக்களாகக் கொண்டாடி வருகின்றோம்.

தன்னைப் பெற்று, வளர்த்து, வாழ்க்கையை அனுபவிக்க கல்வியையும் மற்றவற்றையும் தந்திடும் தம் தாய் தந்தையரின் பிறந்த நாளையே அறிந்து கொள்ள ஆர்வம் காட்டாத நிலையில் உள்ள நம்மில் எத்தனைப் பேர், வாழ்க்கை உண்மைகளைச் சொல்லிப் போந்த நம் தலைவர்களின் ஜெயந்தியை நினைவிற் கொள்ளப் போகின்றோம்! விடுமுறை தந்திட்ட போதுதான் அவர்களுடைய ஜெயந்தியைத் தெரிந்து கொள்கின்றோம்; அப்போதும்கூட, அவர்கள்தம் அறிவுரையை என்று நாம் நம் வாழ்வில் நினைவு கூர்ந்தோம்! உயர்ந்தவனது உழைப்பைப் பார்க்காது, அவனது நிலையைப் பார்த்து, எளிமையான வாழ்க்கையை ஆடம்பரப்படுத்திக் கொண்டு, பகற்கனவு கண்டு தம்மைச் சுற்றிலும் பிரச்சனை வலைகளைப் பின்னிக் கொண்டதில் சிறிதும் ஆச்சர்யம் இல்லை. இந்நிலையில் இச்ஜெயந்தி விழாக்களை எண்ணிப் பார்க்கத் தவறியதில் சிறிதும் வியப்பேதும் இல்லைதான். இருந்திடினும், ஒரு மாதத்தில் ஓரிருவரின் ஜெயந்தி நாட்கள் வந்திடும்போது, அவை நம்மைப் பெரிதும் ஈர்ப்பதில்லை. அவ்ஜெயந்தி விழாக்களின் எண்ணிக்கை ஐந்தாறாக அமைந்திடும்போது நம்மை அறியாமல் நாம் சிறிதே சிந்திக்கத் தலைப்படுகின்றோம். சிந்தனை சீரியதாக அமைந்திடும்போது, ஜெயந்தி விழாக்களின் முக்கியத்துவத்தை உணரத் தலைப்படுகின்றோம். உணர்ந்தவற்றை வாழ்க்கையில் சிறிதளவாவது அநுசரித்திட்டால், அதுவே அவர்களுக்கு நாம் செலுத்திடும் ஆன்ம அஞ்சலிகளாகும்.

ஆதிப்பரம்பொருளான ஸ்ரீமந் நாராயணன் இம்மண்ணில் தர்மத்தைக் காக்க எடுத்திட்ட நரசிம்ம அவதாரம்; பக்தனின் பெருமை, தொண்டின் சீர்மை ஆகியவற்றின் சிறப்பினைப் பாருக்குக் கூறி இராமாவதாரத்திற்கு ஏற்றம் தந்திட்ட அனுமனின் அவதாரம்; முக்கண்ணனின் பெருமை பேசிடும் அத்துவைதத் தீபத்தினை ஏற்றிட்ட ஆதிசங்கரரின் அவதாரம்; வேதம் கூறிட்ட சமய உண்மைகளை, பரமன் பெருமையை எவரும் உணர்ந்திட பா பல புனைந்து, விக்ரக வழிபாட்டின் எளிமை உணர்த்திட்ட நம்மாழ்வார் அவதாரம், ஞானியரும், அறிஞரும் மட்டுமே தெளிந்து இன்புறும் வேத உபநிடதங்களுக்கும், சமய இலக்கியங்களுக்கும் வைணவ வழி நின்று விளக்கம் பல தந்து விசிஷ்டாத்வைதக் கொள்கை பரப்பிய பெரும்பூதூர் பெற்ற ஸ்ரீ இராமானுஜர் அவதாரம்; மரபு வழி இலக்கிய நடையிலிருந்து நழுவி, சாமான்யரும் நாளும் பணிந்தேத்திட இசையும் பக்தியும் கலந்த சுமார் 32000 கீர்த்தனைகளைத் தெலுங்கில் இயற்றிய ஸ்ரீ அன்னமாச்சார்யா அவதாரம் ஆகியன இம்மண்மீது திகழ்ந்திட்ட திருநாட்கள் ஆண்டின் பல்வேறு காலங்களில் அமைந்திருந்தால் அவ்வவதாரப் பெருமைகள், சிறப்புக்கள் சிதறியிருக்கும். நாமும் சிந்திக்கத் தவறியிருப்போம். ஆனால் மேற்கூறிய அத்திருவவதாரத் திருநாட்கள் ஒரே மாதத்தில், அதாவது வைகாசி மாதத்தில் திகழ்ந்திருப்பது உண்மையிலேயே ''வைகாசி மாதம் மாதவ மாதமே'' என்பதை உறுதிப்படுத்துகின்றது.

''இப்பிறவி தப்பினால் எப்பிறவி வாய்க்குமோ, எதுவருமோ, அறிகிலேன்'' எனும் தாயுமானவர் வாக்கினை சற்றே சித்தத்தில் தேக்கி, உயர்ந்த பிறவியான மனிதப்பிறவியை எடுத்த நாம், அதன் பயனாக நம்மைப் படைத்திட்ட அப்பரம்பொருளின் திருத்தாளினைப் பற்றுதலையே உயர்வாகக் கொண்டு. அதற்குத் தகுதியாக சில அடிப்படை இறைமைக் குணங்களை நம்மிடையே வளர்த்துக் கொள்ளுதலேயாகும் என்பதை உணர்தல் வேண்டும். இம்முயற்சிக்குத் தடைகள் ஏற்படும்போது, ஒருவனுக்குத் தேவை ஆன்மபலம். இதனை அடைய ஞான கர்ம, மார்க்கங்களைவிட பக்தி மார்க்கமே பெருந்துணையாக, உறுதி அளிப்பதாக அமைந்துள்ளது. இப்பக்திக்குத் தேவை ப்ரபக்தி எனும் சரணாகதி உபாயமேயாகும். இதனைத்தான் மேற்கூறிய அவதாரங்கள் தங்கள் செய்கை சொல் ஆகியவற்றின்மூலம் நமக்கு விளக்கிக் கூறுகின்றன.

''அழுது முறையிட்டால் அம்பலத்தே கேட்கும்'' எனும் வாக்கிற்கிணங்க, பெற்றவனே தனக்குத் தீங்கிழைத்த போதெல்லாம், அப்பரமனே தனக்குக் கதியெனக் கொண்டு 'தூணிலும் இருப்பன்' என்று கூறிய அவன்தன் சொல்லைக் காப்பாற்றிடத் தூணைப்பிளந்து, அரக்கன் மார்பினையும் பிளந்த அச்சிங்கவேள் அவதாரம் பிரகலாதனின் பிரபக்தி நெறி வழிபாட்டிற்கு ஒரு நல்லுதாரணமாகும். ''நவ வியாகரண பண்டிதன்'' 'ஸர்வ மந்திர, தந்திர, யந்திர ஸ்வரூபி' என்று போற்றப்படுபவனும், ஆத்ம, மனோ, புத்தி, தேக, பிராண, சம்பத் ஆகிய அறுவகை பலங்களைக் கொண்டவனும், சுந்தர காண்ட நாயகனுமான அச்சொல்லின் செல்வன் வில்லின் நாயகனுக்கு அடிமை பூண்டொழுகியது சரணாகதி பெருமையைப் பாரறியச் செய்யவேதான்.

ஸகுணையையும், சரணாகதியினையும் தன் தத்துவ ஞானத்தில் இணைத்தே ஊட்டியவர் ஸ்ரீ ஆதிசங்கரர். பாரதம் வேத உபநிட மார்க்கம் விலகி, வெறும் சமயச் சடங்குகளையே கண்மூடித்தனமாகப் பின்பற்றிச் சென்றபோது, ஒரு விடிவெள்ளியாகத் தோன்றி ஷண்மதம் நிறுவி, சாத்திர, தோத்திர வழி முறைகளை ஏற்படுத்தி, இஷ்ட தேவதா வழிபாட்டினை அறிமுகப்படுத்தி, சமயப்பள்ளிகளை நிறுவி பக்தி மூலம் ஞானத்திற்கு வழிகாட்டிய அப்பகவத்பாதாள், காலம் தந்திட்ட இந்து சமயப் புரவலரேயாவார், புருஷார்த்தத்தை சரணாகதி மூலமாக அடைந்திட வழிகாணும் வகையில்,

**(48-ம் பக்கம் பார்க்க)**

# செய்திச் சுருக்கம்

ஆராதனை விழா :

திருப்பதி ஸ்ரீ தியாகராஜா விழா மற்றும் அறக்குழுவின் சார்பில் திருப்பதியில் 44வது வருடாந்திர இசை விழா 26-4-89 முதல் 5-5-89 வரை கொண்டாடப்பட்டது. இது போது ஸ்ரீ தியாகராஜர் திருப்பதிக்கு 150 ஆண்டுகளுக்கு முன்பு அதாவது 1839-இல் வருகை புரிந்ததையும், அதுபோது இத்திருத்தலத்தில் இரு கீர்த்தனைகளைப் பாடியதையும் மன திற் கொண்டு அன்னாருக்கு நினைவஞ் சலிகளை சமர்ப்பிக்கும் வகையிலும் இவ்விழா பெரிதும் சிறப்புற்றது.

26-4-89 அன்று துவக்க நாள் நிகழ்ச்சிகள் ஸ்ரீ தியாகராஜர் மண் டபத்தில் நடைபெற்றன. விழா விற்கு வருகை புரிந்தோரை ஸ்ரீ தியாகராஜா அறக்குழுவின் பொதுச் செயலர் திரு. எம். கிருஷ்ண சுவாமி அவர்கள் வரவேற்றுப் பேசுகையில் தியாகராஜா ஆராதனை நிகழ்ச்சிகளை நடத்துவதற்கு இலவசமாக இடம் தந்த ஸ்ரீமான் அர்ச்சகம் வெங்கடபதி தீக்ஷிதலு அவர்களுக்குத் தன் நன்றி யைத் தெரிவித்துக் கொண்டு ஒவ் வொரு ஆண்டும் இசை நிகழ்ச்சி களை நடத்த பொருளுதவியும், மற்றைய உதவிகளையும் தந்து வரும் தி.தி. தேவஸ்தானத்தாரையும் புகழ்ந்து பேசினார். இசை விழா நிகழ்ச்சிகளைத் துவக்கி வைக்க வருகை புரிந்த சங்கீத கலாநிதி, ஸப்தகிரி சங்கீத வித்வன்மணி டாக்டர். எம். எல். வசந்தகுமாரி அவர்களின் இசைப் புலமையினையும், இசைத் தொண் டினையும் குறிப்பாக புரந்தர தாஸர் கீர்த்தினைகளை இன்றுநாட்டில் பரவப் பெரிதும் காரணமாக விளங்கிய திரு மதி. எம். எல். வசந்தகுமாரியைப் பெரிதும் பாராட்டிப் பேசினார். பின் னர் தி. தி. தே. முன்னாள் செய லாட்சித் தலைவரும், பொறுப்பாண் மைக் குழுத் தலைவருமான திரு. சி. அன்னாராவ் அவர்களின் துணைவி யார் திருமதி. அனுசுயா அன்னாராவ் அவர்கள் குத்துவிளக்கேற்றினார். ஸ்ரீ தியாகராஜா அறக்கட்டளையின் தலைவர் திரு. கே. வி. சுப்ரமணியம் அவர்கள் முக்கிய விருந்தினர் களுக்குப் பொன்னாடைப் போர்த்திக் கௌரவித்தார். இசை விழா நிகழ்ச்சி களை திருமதி. எம். எல். வசந்தகுமாரி அவர்கள் துவக்கி வைத்து உரை யாற்றுகையில் ஸ்ரீ தியாகராஜர் கீர்த் தனைகளில் பொதிந்துள்ள நீதி நெறிக் கருத்துக்களை அனைவரும் வாழ்க்கை யில் கடைபிடிக்க வேண்டியதன் அவ சியத்தைப் பல எடுத்துக்காட்டுகளின் மூலம் விளக்கிப் பேசினார். தியாக ராஜர் போன்ற பல இசைக் கவிஞர் கள்தாம் இன்று பலருடைய இசைக் கலைஞர்களுக்கு வாழ்க்கையை அமைத்துத் தந்துள்ளனர் என்பதைக் குறிப்பிட்டுப் பேசினார். பின்னர் இன்றைக்கு சுமார் 150 ஆண்டு களுக்குமுன்பு 1839இல் திருப்பதிக்கு வருகை புரிந்து இத்தலத்தில் பாடிய 'தெர தீயக ராதா' மற்றும் 'வேங்க டேசா நினு ஸேவிம்பனு' எனும் கீர்த்தனைகள் பொறிக்கப் பெற்ற பலகையினைத் திருவாரூர் சங்கீத மும் மூர்த்தி அறக்கட்டளைத் தலைவர் திரு. ஆர். யக்ஞராமன் அவர்கள் திறந்து வைத்தார். பின்னர் தம் உரையில், பல ஆண்டுகளாகப் பல இசை விற்பன்னர்களால் குறிப்பிட்ட ராகங்களில் மட்டுமே பாடப்பட்டு வரும் கீர்த்தனைகளை வேறு ராகங் களில் பாட முயற்சிப்பது இசைக்கும், இசைத்துறைக்கும் செய்யும் துரோக மாகும் என்று கூறினார். தி. தி. தே. பொறுப்பாண்மைக் குழு உறுப்பினர் கள் திரு. எல். வி. ராமய்யா மற்றும் திரு. தேவநாதன் அவர்களும் இத் துவக்க நாள் நிகழ்ச்சியில் பங்கேற்று உரையாற்றினார்கள். 10 நாட்கள் நடைபெற்ற இவ்இசை விழா நாட் களின் காலையிலும் மாலையிலும் இசை சம்பந்தப்பட்ட உரைக்கோவைகளும் இன்னிசைக் கச்சேரிகளும் நடை பெற்றன. 5-5-89 அன்று மாலை புல்லாங்குழல் மேதை டாக்டர். என் ரமணி அவர்களுக்கு 'ஸப்தகிரி சங் கீத வித்வன் மணி' எனும் பட்டம் சென்னை உயர்நீதி மன்ற பொறுப்ப தலைமை நீதிபதி. மேதகு. மோகன் அவர்களால், அறக்கட்டளையின் சார் பில் வழங்கப்பட்டது. இதுபோது சென்னை மியூசிக் அகாடமித் தலைவர் திரு. டி. டி. வாசு அவர்களும் பங் கேற்று உரையாற்றினார்.

ஃ ஃ ஃ

பொன் விழா :

1937-இல் ரூ. 70,000ஐ பரிமாற் றக் கைமுதலாகக் கொண்டு துவக்கப் பெற்ற தி. தி. தே. ஊழியர்களுக் கான கூட்டுறவு அங்காடியின் பொன் விழா 10-4-89 அன்று வெகு விமர்சை யாகக் கொண்டாடப்பட்டது. அவ் அங்காடியின் இன்றைய கைமுதல் ரூ. 720 இலட்சமாகும். இப்பொன் விழா நிகழ்ச்சிகளுக்கு ஆந்திர மாநில கூட்டுறவுத் துறை அமைச்சர் திரு. சூர்யராவ் அவர்கள் பங்கேற்று, சிறப்பு மலர் ஒன்றினையும் வெளியிட் டார். தி. தி. தே. செயலாட்சித் தலைவர் தம்முரையில், இப்பொன் விழாவை ஒட்டி, இக்கூட்டுறவு அங் காடி ஊழியர்களுக்கு ஒரு மாத ஊதியம் கருணைத் தொகையாக வழங்கப்படும் என்று அறிவித்தார். இவ்விழாவிற்கு மாநிலத்தின் சுகா தார அமைச்சர், அறநிலையத்துறை அமைச்சர் மற்றும் தி. தி. தே. பொறுப்பாண்மைக் குழு உறுப்பினர் திரு. எல். வி. ராமய்யா ஆகியோரும் பங்கேற்று உரையாற்றினர். விழா விற்கு வருகை புரிந்தோரை அங் காடியின் செயலர் திரு. கே. என். சுவாமி வரவேற்றார். அன்று மாலை

(47-ம் பக்கம் பார்க்க)

# மச்சாவதாரம்

சீதுக்களான சம்சாரிகள் இந்தக் கர்மபூமியில் 'மாறி மாறிப் பல பிறப்பும் பிறந்து' அல்லற்படாதவாறு செய்யத் திருவுள்ளம் கொண்டு எம்பெருமானாகிய ஸ்ரீமந் நாராயணன் தானே பல அவதாரங்களை எடுத்து அவர்களை உய்விக்கிறான். இதனை,

> மீனோடு ஆமை கேழல் அரி
> குறளாய் முன்னும் இராமனாய்த்
> தானாய் பின்னும் இராமனாய்த்
> தாமோ தரனாய்க் கற்கியும்
> ஆனான்.'
>
> —பெரி. திரு. 8.8:10

என்று திருமங்கை ஆழ்வார் அநுசந்தித்து அநுபவித்து அகம் மகிழ்வார். அவனுடைய அவதார ரகஸ்யத்தை அறிபவர்கள் மறுபிறவியின்றி வீடு பேறு அடைவர் என்பது வைணவர்களின் அதிராத கொள்கை; நம்பிக்கையும் கூட. இந்த அவதார ரகஸ்யத்தைப் பரந்தாமன் தான் அருளிய கீதையில் நான்காம் இயலில் (4-5-9) அருளிச் செய்கின்றான். அதன் சாரம்: (1) எம்பெருமானுடைய அவதாரம் இந்திரஜாலம் போல் பொய்யானதன்று; உண்மையானதே. (2) நம்முடைய ஞானம் இந்த கரும பூமியில் சுருங்கிக் கிடப்பது போல் எம்பெருமானுடைய ஞானம் அவன் அவதரிக்கும் காலத்திலும் சுருங்குவதில்லை. அவன் தனக்கு இயற்கையாயுள்ள பிறவாமை, அழியாமை, எல்லாவற்றிற்கும் தலைமை முதலிய தன்மைகளை விடாதபடியே அவதரிக்கின்றான். (3) இங்கு அவதரித்துள்ள அவனுடைய திருமேனி நம்முடைய உடலைப் போல் சத்துவம், இராசசம், தாமசம் ஆகிய மூன்று குணங்களால் ஆகியதன்று; சுத்த சத்துவமயமானது. (4) அவனுடைய பிறப்பு நம்முடையதைப் போல் கர்மத்தால் வருவதன்று; தன் சங்கல்பத்தாலே வருவதாகும் (5) அவனுடைய பிறப்பு நம்முடையது போல் கர்மப் பரிபக்குவம் ஆகுங்காலத்தில் வருவதன்று; எப்பொழுதெல்லாம் அறம் அழிந்துபோய் மறம் மேலெழுகின்றதோ அப்பொழுதெல்லாம் அவன் தன்னைப் பிறப்பித்துக்கொள்ளுகின்றான். (6) அவனுடைய அவதாரத்திற்குப் பலன் சுக துக்கங்கள் கலந்த பலனை அநுபவிப்பதன்று. அவனைக் காணாது உயிர் தரிக்க மாட்டாமல் அவனைப் பிரிந்த ஒரு கண நேரத்தையும் ஆயிரம் கல்ப காலமாக நினைந்து அங்கம் குலைந்து அழிகின்ற சிறந்த பக்தருக்குத் தன் உருவத்தையும் செய்கையையும் காட்டுவது, பேசுவது முதலியவற்றால் அவர்கள் உயிர்தரிக்குமாறு செய்வதும், அவர்கட்குப் பகைவர்களாயுள்ள தீயவர்களை அழிப்பதும் அறத்தை நிலைநாட்டுவதுமே அவதாரத்திற்குப் பலனாகும். (தேசிகன் : கீதார்த்த சங்கிரகம்—5; தே. பி. 330)

மச்சாவதாரம் :

மச்சம், கூர்மம், வராகம், நரசிம்மம், வாமனம், திரிவிக்கிரமம், இராமன், பலராமன், கிருட்டிணன், கற்கி- என்று அவதாரங்களைப் பத்து என்பதாகக் கொள்வர். இங்கு மச்சாவதார வரலாற்றைக் காண்போம். ஒரு பிரமகல்ப முடிவில் பிரம சம்பந்தமான நைமித்திகப் பிரளயம் உண்டாயிற்று. அப்பொழுது பூமி முதலிய உலகங்கள் கடலால் சூழப்பெற்று மூழ்கும் சமயத்தில் உறக்கம் தெளிந்தெழுந்து அந்த நீரில் படுக்க முயன்ற நான்முகனது முகத்தினின்றும் வெளிக்கிளம்பின நான்கு வேதங்களையும் ஹயக்ரீவன் என்னும் ஒரு தானவன் கவர்ந்து கொண்டு போய் விட்டான். அப்போது வேதங்கள் தொலைந்தது கண்டு திருமால் ஒரு சிறிய மீன் வடிவு கொண்டார்; அக்காலத்தில் தவத்தின் பெருமையினால் உயிர் வாழ்ந்து கிருதமாலா என்னும் நதியின் கரையில் திருமாலைநோக்கித் தவம் புரிந்து கொண்டிருந்த சத்திய விரதர் என்னும் அரச முனிவர் (இராஜரிஷி) நீர் பருகியே உயிர் வாழ்ந்திருந்தார்.

இந்த முனிவர் பெருமான் நீர் பருகும் போது அவரது இரண்டு கைகளுக்கிடையில் ஒரு சிறிய மீன் அகப்பட்டுக்கொண்டது. அதனை அவர் நீரில் விட்டார். அப்போது அந்த மீன், "ஓ கருணைக்கடலான மாமுனிவரே, என்னை இப்படி நீரில் விட்டீரே என் இனத்தார் என்னை விழுங்கி விடுவார்கள்; அடியேனைக் காப்பாற்றியருளவேண்டும்" என்று வேண்டிக்கொண்டது. முனிவரும் அதன் மீது இரக்கம் கொண்டு அதனைத் தன் கமண்டல நீரில் எடுத்து விட்டார். அதனுட் புகுந்த அந்த மீன் ஓர் இரவுக்குள் கமண்டலத்துக்குள் நிரம்பி வளர்ந்து விட்டது. மறுநாள் காலையில் அந்த மீன், "ஓ கருணாமூர்த்தியே, நான் எப்படித் தேவரீருடைய கலசத்துக்குள் இடர்ப்பட்டு வாழ்வது? என் மீது அருள் புரியலாகாதா?" என்று வேண்டியது.


பேராசிரியர் டாக்டர்
ந. சுப்புரெட்டியார்
சென்னை-40.


மீனின் பால் இரக்கங் கொண்ட மாமுனிவர் அந்த மீனைக் கமண்டலத்தினின்று எடுத்துத் தன்னிடத்திலுள்ள சந்தன நீரில் புகவிட்டார். உடனே அது மூன்றடிஅளவு வளர்ந்துவிட்டது அது முனிவரை நோக்கி, "பிரபுவே, என்னை இப்படித் துயருறும்படி விட்டு வைப்பது அறமாகுமா?" என்று கலக்கத்துடன் மொழிந்தது. இதனைக் கேட்ட மாமுனிவர் மேலும்

இரங்கி அதனை ஒரு குளத்தில் விட்டார். அங்கும் அது குளம் தன் உடம்புக்குப் போதாத அளவில் பேருருவமாக வளர்ந்தது. மீண்டும் அந்த மீன் அரச முனிவரை நோக்கி, "பெரியீர், நான் சுகமாக வசிக்க இடம் பெறாமல் வருந்துவது நும் திருவுள்ளத்திற்கு உகப்போ?" என்று கேட்டது. இந்த மொழியைச் செவிமடுத்த முனிவர் கருணை கூர்ந்து அதனை எடுத்து கடலில் விட்டார். உடனே அது ஓர் இலட்ச யோசனை நீளமும் பதினாயிரம் யோசனை பருமனும் ஒற்றைக் கொம்பும் வாய்ந்த ஒரு பெரு மீனாகத் திருவவதரித்தது. அதன் ஒரு செலுவின் அகத்தே கடல் வெள்ளமும் ஒடுங்கி விடும்படியாகக் காணப்பட்டது. முனிவரும் அதன் பேருருவத்தைக்கண்டு வியந்து அதன் மீது மயல் கொண்டு, "ஓ மீன் அரசனே, நீ யார்? நின் வரலாற்றைத் தெரிந்து கொள்ள ஆவலுள்ளவனாக உள்ளேன். உனது தத்துவத்தை வெளியிட வேண்டும்" என்று கூறி கைகூப்பிச் சிரம் தாழ்த்தி வேண்டினார்.

அந்த மச்ச அரசனும் முனிவரின் வேண்டுகோளுக்கிரங்கி, "ஓ மாமுனிவரே, இன்று முதல் ஏழு நாட்களுக்குள் இந்த மூன்று உலகங்களும் மூழ்கி விடப் போகின்றன. அந்தப் பெருநீரில் ஒரு விசாலமான ஓடம் வரப் போகின்றது. அந்தப் படகில் ஏழு முனிவர்களும் (சப்தரிஷிகள்) நீரும் எல்லா ஒஷதிகளும் எல்லாவகைப் பிராணிகளும் ஏறி மனத்திற்கு யாதொரு வருத்தமுமின்றி உலாவக் கடவீர்கள். இங்ஙனம் சஞ்சரித்துக் கொண்டிருக்கும் போது ஒரு பெருங் காற்று வீசும். அதனால் அந்த ஓடம் பெரு நீரில் அலையும்; அப்பொழுது எனது தலையில் முளைத்துள்ள பெரியதொரு கொம்பில் பெரியதொரு பாம்பினால் அந்த ஓடத்தைக் கட்டி விடுக; பிறகு நான் அந்தப் படகுடன் உம்மையும் எல்லாப் பிராணிகளையும் முனிவர்களையும் சுமந்து கொண்டு அந்தப் பேரிருள் நீங்கும் வரையில் நான் கடலில் சஞ்சரிப்பேன்; அப்போது என் பெருமையை நீர் உணர்வீர்" என்று உரைத்து மறைந்தது.

இதனைக்கேட்டிருந்த சத்தியவிரதர் என்ற அந்த முனிவர் வியப்புற்றுப் பகவானாலே குறிக்கப்பட்ட அந்தக் காலத்தை எதிர்பார்த்திருந்தார். குறித்த காலம் வந்ததும் ஏழு மேகங்களின் ஆரவாரத்தால் கடல் கிளர்ந்தெழத் தொடங்கிற்று; அந்தச் சமயத்தில் ஒரு பெரிய ஓடமும் அக்கடலில் வரக்கண்டார். மிக்க மகிழ்ச்சியுடன் எல்லாச் செடிகொடி விதைகளையும் அந்தப் படகிலேற்றித் தாமும் ஏறிக்கொண்டார். சிறிது நேரத்தில் ஏழு முனிவர்களும் வந்து ஓடத்தில் ஏறிக்கொண்டனர். சத்திய

# ராம நாம மகிமை!

ஓர் ஊரில் கோயில் பூசாரி ஒருவர் இருந்தார். அவரது மனைவி மிகவும் அழகு வாய்ந்தவள். அவளைக் கண்டு ஆசை கொண்ட ஒருவன் அவளைப் பலாத்காரம் செய்து இழுத்துக்கொண்டு ஓடிவிட்டான். அப்பூசாரி பாவம், மிகவும் நல்லவர். மனைவியைத் தேடித் தேடி அலைந்தார். பல மாதங்கள் கழிந்தன.

ஒரு பெரிய பட்டணத்தில் தெருவழியாகச் சென்று கொண்டிருக்கும் பூசாரியை அவரது மனைவி கண்டாள். ஓடோடி வந்து அவரது திருவடிகளில் வீழ்ந்து தான் தவறு செய்யவில்லை என்பதைக் கூறி மன்னிப்புக் கோரினாள். பல மாதங்கள் பிறன்மனையில் இருந்த தன் பத்தினியை அப்படியே ஏற்றுக் கொள்ள அவரது மனம் இடம் தரவில்லை. அவளைப் பத்திரமாக ஒரு இடத்தில் இருத்திவிட்டு பக்கத்து ஊருக்குச் சென்றார். அந்த ஊரில் உள்ள ஒரு பெரியவர் இக்கட்டான நிலையில் உள்ளவர்களுக்கு அறநூல் வழியில் தீர்ப்பளிப்பதில் வல்லவர். பூசாரி அவர் வீட்டை அடைந்தார். அங்கே அழு குரல்கள் கேட்டன. பூசாரி தேடி வந்த பெரியவர் முதல் நாளே மாண்டு விட்டார்.

அவர் ஒரே மகனுக்கு ஆறுதல் கூறி விட்டு, கிளம்பிய பூசாரியிடம் அவர் வந்த காரணம் பற்றி வினவினான். தனயனுக்கும் தந்தையின் அறிவாற்றல் இருக்குமென உணர்ந்த பூசாரி ஒளிமறைவின்றி தன் கதையைக் கூறிவிட்டார். தன் மனைவியை ஏற்றுக் கொள்ளலாமா என பூசாரி கேட்டார். "என் தந்தை இருந்தபோது இப்படி ஒரு கேள்வியே பிறந்ததில்லை. இருந்தாலும் கூறுகிறேன். மூன்று முறை ராம நாமத்தைச் சொல்லி உங்கள் மனைவியை ஏற்றுக் கொள்ளுங்கள்!" என்று கூறினான். "ஏண்டா இப்படி எல்லாம் தப்பாக தீர்ப்பு சொல்லுகிறாய்? உன் அப்பாஇருந்தால் இப்படி எல்லாம் சொல்லியிருக்கமாட்டாரே" என்றாள், இதையனைத்தையும் கேட்டுக்கொண்டிருந்த அவன் தாய். அதற்கு மகனோ "நான் ஒன்றும் தப்பாகச் சொல்லவில்லையே. ராம நாமத்தை மூன்று முறை சொல்லச் சொன்னேன். இது தப்பா?" என்றான்.

தாய் சொன்னாள் இவ்வாறு: "ஏண்டா மூன்று முறை சொல்லச் சொன்னாய்? ஒரு தடவை சொன்னாலே எல்லா பாபங்களும் போய் விடுமே. மேலும் இரண்டு ராம நாமங்களுக்கு யார் தீனி போடுவது?"

— திருமதி கமலா மாரியப்பன்.

விரதரும் முனிவர்களும் பகவானைச் சிந்தித்துக் கொண்டிருந்தனர். சிறிது நேரத்தில் பெரிய கொம்புள்ள மச்ச உருவம் கொண்டுள்ள பகவான் காணப்பட்டார். ஓர் இலட்ச யோசனை நீளமும் பதினாயிரம் யோசனை பருமனும் ஒற்றைக் கொம்பும் பொன் நிறமும் எல்லா உலகங்களையும் ஈர்க்கும் உருவமும்கொண்ட பகவான் காணப்பட்டார். உடனே சத்தியவிரதர் ஒரு பெரிய பாம்பைக் கொண்டு அந்த மச்சப் பகவானது கொம்பில் அந்தப் படகைக் கட்டி விட்டார். பகவானும்அதனைச்சுமந்து கொண்டு அண்டகடாகத்தளவும் துள்ளி விளையாடிக்களித்தார். பின்பு ஹயக்ரீவன் கவர்ந்து சென்ற வேதங்களையும் மீட்டுக்கொணர்ந்தருளினார். ஆக இவ்வண்ணம் பிரளயாபத்தினின்றும் பிரஜைகளைக் காத்தருளியதும் வேதங்களை மீட்டுக் கொணர்ந்ததும் மச்சாவதார வரலாறாகும்.

முன் ஒரு கல்பத்தின் இறுதியில் நான்முகன் துயிலுகையில் அவன் முகங்களினின்றும் வெளிப்பட்டு மனித உருவத்துடன் நான்கு வேதங்களும் உலாவிக் கொண்டிருந்தன. அப்போது மிக்க பலசாலியும் நெடுங்காலம் தவம் செய்து பெரு வரங்கள் பெற்றவனுமான சோமகன் என்னும் அசுரன் அந்த நான்கு வேதங்களையும் கவர்ந்து கொண்டு பிரளய வெள்ளத்தில் மறைந்து சென்றான். இதனையுணர்ந்த திருமால் ஒரு பெரிய மீனாய்த் திருவவதரித்து அந்தப் பிரளயப் பெருங்கடலில் புகுந்து அந்த அசுரனைத் தேடிப்பிடித்துக்கொன்று அவன் கவர்ந்து சென்ற வேதங்களை மீட்டுக் கொணர்ந்து நான்முகனிடம் கொடுத்தருளினன் என்ற சற்று மாறுபட்ட வரலாறும் உண்டு. இந்த அசுரனின் பெயர் சோமகன் என்றலும் ஹயக்ரீவன் என்றலும் உண்டு.

**ஆழ்வார்களின் அநுசந்தானம்:**

ஆழ்வார்கள் பகவதநுபவத்தில் ஈடுபட்டுக் களிக்கும் போது இந்த அவதார சேஷ்டிதங்கள் அவர்தம் பாசுரங்களிலும் வெளிப்படும். இங்ஙனம் வெளிப்படும்போது அவதாரங்கள் தனித்தனியாகவும் சேர்ததும் அநுசந்திக்கப்படும். இது அவ்வப் போது களித்திருக்கும் மனநிலையைப் பொறுத்தது. திருமங்கையாழ்வார் எம்பெருமானின் மச்சாவதார சேஷ்டிதங்களை,

நிலையிடம் எஙகும் இன்றி
நெடுவெள்ளம் உம்பர்
வளநாடு மூட இமையோர்
'தலையிட மற்றெ மக்கோர் சரணில்லை' என்ன
அரணாவன் என்னும் அருளால்
அலைகடல் நீர்கு ழம்ப அகடாட ஓடி
அகல்வா னுரிஞ்ச முதுகில்
மலைகளை மீது கொண்டு
வருமீனை மாலை
மறவா திறைஞ்சென் மனனே.

பெரி. திரு. 11.4;1

[நிலையிடம்—நிலைத்துநிற்கும் இடம் நெடுவெள்ளம் — பிரளயம்; உம்பர்- மேலுலகத்தவர்; வளம் — செழிப்பு; மூட—பரவ; தலையிட — தலைவணங்கி இரக்க; சரண்—புகலிடம்; அருள் — கிருபை; அகடு—கீழ்வயிறு; உரிஞ்ச— வீசும்படி; மீதுகொண்டு — ஏறிட்டுக் கொண்டு; மீனைமாலை — மச்ச உருவமான எம்பெருமானை; இறைஞ்சு— வணங்குக ]

என்ற ஒரு முழு பாசுரத்தில் அநுசந்தித்து மகிழ்கின்றார். இதனையே மிகச் சுருக்கமாகத் திருநறையூர் மீதுள்ள (6,6;2) ஒரு பாசுரத்தில்,

கொழுங்கயலாய் நெடுவெள்ளம்
கொண்ட காலம்
குலவரையின் மீதோடி
அண்டர் தப்பால்
எழுந்தினிது விளையாடும்
ஈசன் எந்தை

[கொழுங்கயல் — கொழுத்த மீன்; நெடுவெள்ளம்—பிரளயம்; மீது ஓடி— சஞ்சரித்து; எழுந்து—கிளம்பி; இனிது —சுமாக; விளையாடும் — விளையாடின; ஈசன்—எம்பெருமான்]

என்ற ஒன்றரை அடிகளிலேயே அநுசந்தித்துக்களிக்கின்றார். மேலும்

(44-ஆம் பக்கம் பார்க்க)


ஸ்ரீ முருகன் கோயில், திருச்செந்தூர்.
— எம். இராஜலட்சுமி, திருப்பதி.

# காலப் பிரமாணம்

மிக்க நாகரீகம் படைத்த நாட்டினர் பலராலும் அன்று தொட்டு சாந்திர மானமே கொள்ளப்படுகிறது என்பது நன்குப் புலப்படுகிறது.

திரு. க. சுகுமாரன்,
திருவாரூர்

உலகின்கண் உள்ள பல மொழிகள் பேசும் பிரிவினர்களும் தங்கள் தங்கள் மார்க்க கருமங்களையும் லௌகீக கருமங்களையும் ஒருங்கே கொள்ளும் பொருட்டு, காலத்தைப் பலவித மாகப் பிரித்துக் கொண்டனர். சௌரமான வருடமும், சாந்திரமான வருடமும் ஆகிய இவைகளே இயற்கையால் பெறப்படும் காலப்பகுதி களாகும். மற்றைய மணித்தியாலம், நாழிகை முதலியனவும், நாட்களின் தொகுதிகளாகிய வாரங்களும், மாதங்களும், வருடங்களின் தொகுதி களாகிய வட்டங்களும், பிறவும் செயற்கையால் (மனிதர்களால்) உண்டாக்கப்பட்டது என்பதை அறிய முடிகிறது.

இக்காலப் பகுதிகளை ஊன்றிப் பார்க்கும்போது வான சாஸ்திர அறிவென்பது சிறிதும் இல்லாத ஆதி காலத்தில், மனிதர்கள் இராப்பகல் என்னும் இருபகுதிகளையுமிடைய நாள் ஒன்றைக் கொண்டே 1-ம் நாள், 2-ம் நாள், 50-ம் நாள், 100-ம் நாள் என எண்ணுக் கணக்கிட்டிருப்பார்களென்றும், பின்பு அறிவு, ஆராய்ச்சியின் காரணமாக நேரத்தையும், வாரத்தையும், மாதத்தையும், தேதியையும், பக்ஷத்தையும், திதியையும், நக்ஷத்திரத்தையும், ருதுவையும், வருடத்தையும், வட்டம் முதலியனவற்றையும் பிறப்பித்துக் கொண்டார்கள் என்பதையும் அறியக் கிடக்கிறது.

பூர்வத்தில் சூரியமானத்தைக் கணக்கிடுதல் அரிதாயிருந்தமையாலும், சந்திரன் நாள் வீதம் பிறை வடிவாய் வளர்ந்து பூரணையாகியும், பின் பிறை வடிவாய்த் தேய்ந்து அமாவாசையாகியும் வரும் நிகழ்ச்சியை உத்தேசப்படி கணக்கிடுதல் எளிதாய் இருந்தமையாலும், அப்பிறை வடிவங்களையே தேதிகளாகவும், பெரும் பாலும் அமாவாசையையே மாதாந்தமாகவும் கொண்டு சாந்திரமான வருடங்களை கணக்கிடுவராயினர்.

இந்தியா, மகமதியா, சீனர், யூதர் முதலிய நாட்டினர் இக்காலத்திலும் சாந்திரமானத்தைக் கொள்கின்றனர்கள். ஆங்கிலத்தில் month (மாதம்) என்பது moon (சந்திரன்) என்னும் பதத்திலிருந்தே பிறந்தது. சந்திரனுக்கும், மாதத்திற்கும் தமிழில் திங்கள் என்றும், சீனத்தில் ரிஸி என்றும் பொதுப் பெயர் உள்ளது. தற்காலத்தில் தமிழில் வழங்கப்படும் மாதப் பெயர்களெல்லாம் பௌர்ணமி சந்திரன் எந்த நக்ஷத்திரத்தோடு கூடுகின்றதோ அந்தநக்ஷத்திரத்தின் பெயரால் அழைக்கப்படும் பெயர்களாய் இருக்கின்றது. உலகிலுள்ள பழமை

இனி இக்காலத்தில் சாந்திரமானம் சௌரமானம் என்னும் இரண்டினையும் பலரும் கொள்கின்றனர்கள். லௌகீக விஷயத்திற்குச் சௌரமானத்தையும், வைதீக விஷயத்திற்கு சாந்திர மானத்தையும் பெரும்பான்மை கொள்வாராயினர்.

சூரியன் 12 ராசிகளையும் (360 பாகையையும்) சுற்றிவரும் காலம் சௌரமான வருடம் எனவும், சுக்கில பக்ஷப் பிரதமை முதல் அமாவாசை வரையுள்ள காலம் சாந்திரமான மாதம் எனவும், இப்படி 12 அமாவாசை கொண்ட காலம் சாந்திரமான வருடம் எனவும் பெயர் பெறும். சுமார் 365 நாளும் 6 மணித்தியாலமும் 9 நிமிடமும் 9 விநாடியும் கொண்டது ஒரு சௌரமான வருடம். சுமார் 29 நாளும் 12 மணித்தியாலமும் 44 நிமிடமும் கொண்டது ஒரு சாந்திரமான மாதம்; சில வருஷங்களில் 13 சாந்திரமான மாதங்களும் வரும். இரண்டு அமாவாசை வரும் சௌரமான மாதத்தில் சாந்திரமான மாதம் அதிகம் கொள்ளப்படும்.

நாட் பிறப்பு, மாதப் பிறப்பு, வருடப் பிறப்பு முதலியனவற்றைக் கொள்ளும் முறையில் பல நாட்டினரும் பலவிதமாய் இருப்பினும் நாளை 24 பாகமாகப் பிரித்துக் கொண்டது வியக்கத்தக்கதே. ஒரு நாளின் (24 மணித்தியாலத்தில்) ஒரு பங்காகிய ஒரு மணித்தியாலம் ஆங்கிலத்தில் ஹவர் (Hour) எனவும், இலத்தீனில் கௌரா எனவும், வடமொழியில் ஹோரா எனவும், தமிழில் ஓரை எனவும் வழங்கப்படுகிறது. (ஓர் ஓரை) $2\frac{1}{2}$ நாழிகை)

ஆங்கிலேயர் முதலிய மேலை நாட்டினர் 60 விநாடிகள் கொண்டது ஒரு நிமிடமாகவும், 60 நிமிடங்கள் கொண்டது ஒரு மணித்தியாலமாகவும், 24 மணித்தியாலம் கொண்டது ஒரு நாளாகவும் கொள்வர். சீனர் மற்றும் மங்கோலியர் 100 வினாடிகள் கொண்டது ஒரு நிமிடமாகவும், 100 நிமிடங்கள் கொண்டது ஒரு கீயாகவும், 100 கீ கொண்டது ஒரு நாளாகவும் கொள்வர். ஐரோப்பியக் கணக்குப்படி ஒரு நிமிடத்திற்கு 0.0695 கீயாகும். மங்கோலியரின் இந்தப் பிரிப்பானது 17-ஆம் நூற்றாண்டு வரையுமே நிலைப் பெற்றது. பின்பு கணிதவல்லரும் கணித சாஸ்திர சபையின் தலைவருமாகிய "செல்யூட் ஜால்" என்பவரின் சொற்படி ஐரோப்பியரின் வகுப்பே அத்தேசங்களில் கொள்ளப் படலாயிற்று.

இந்தியர்கள் 2/5=0.4 வினாடிகளுக்குச் சரியான 60 விற்பரை கொண்டது ஒரு தற்பரையாகவும், 60 தற்பரை கொண்டது ஒரு விநாடியாகவும், 60 விநாடிகளைக் கொண்டது ஒரு நாடியாகவும், 60 நாடி கொண்டது ஒரு நாளாகவும் வகுப்பர். இன்னும் 15 நிமிடம் கொண்டது ஒரு காஷ்டை

(43-ம் பக்கம் பார்க்க)

# இராமானுஜரிடம் திருவடி பெற்ற கொங்குப் பிராட்டி

திரு. D. கேசவன்-அல்லூர்.

ஒவ்வொரு தமிழ் புத்தாண்டு பிறந்ததும், முதலில் வரும் மாதம் சித்திரையாகும். தமிழ் வருட ஆரம்பம் என்பதாலும், வருடத்தின் முதல் மாதம் என்பதாலும், வசந்த காலம் என்பதாலும் சித்திரை மாதம் சிறப்புடையதாகிறது. இக்காரணங்களைக் காட்டிலும், இரண்டு அவதார புருஷர்களின் அவதாரம் ஏற்பட்டது இந்த சித்திரை மாதத்தில்தான் என்பதினுல் இம்மாதம் மிகுந்த ஏற்றமுடையதாகிறது. இரண்டு அவதார புருஷர்களில், முதலில் அவதாரம் செய்தவர் அத்வைத சித்தாந்தத்தை நிலைநாட்டிய, 'ஆதிசங்கர' பகவத் பாதாளாகும். மற்றெருவர், விசிஷ்டாத்வைத சித்தாந்தத்தை நிலை நாட்டிய ஸ்ரீமத் இராமானுஜர். இக்காரணத்தினுல் மட்டுமே, இந்த சித்திரை மாதம் மிகுந்த ஏற்றமுடையதாகிறது. இரண்டு அவதார புருஷர்களின் அவதார ஜயந்திகளும், அடுத்தடுத்து வந்து, தேச முழுவதும் கொண்டாடப்பட்டு வருகிறது.

இராமானுஜரின் அவதார திருநட்சத்திரம், சித்திரை மாதம் திருவாதிரையாகும். இவருடைய அவதார தினச் சிறப்பை ஸ்ரீமத் மணவாள மாமுனிகள், தாம் அருளிச் செய்துள்ள 'உபதேச ரத்தின மாலை' என்னும் பிரபந்தத்தில், 27, 28ஆம் பாசுரங்களில் சிறப்பித்துக் கூறியுள்ளார்.

"இன்றுலகீர் சித்திரையில் ஏய்ந்த
திருவாதிரை நாள்
என்றையிலு மின்றிதனுக் கேற்ற
மென்தான்—என்றவர்க்குச்
சாற்றுகின்றேன் கேண்மின் எதிராசர்
தம் பிறப்பால்
நாற்றிசையும் கொண்டாடும் நாள்".

(உப. ர. மா. 27.)

"ஆழ்வார்கள் தாங்கள் அவதரித்த
நாட்களிலும்,
வாழ்வான நாள் நமக்கு மண்ணுல
கீர்—ஏழ்பாரு
முய்ய எதிராசருதித்தருளும்,
சித்திரையில்
செய்ய திருவாதிரை."

(உப. ர. மா. 28)

ஸ்வாமி வேதாந்த தேசிகனும், தாம் அருளிச் செய்துள்ள, 'பிரபந்த சாரம்', என்னும் பிரபந்தத்தின் 14 வது பாசுரத்தின் முன் பாதியில்,

"தேசமெலா முகந்திடவே பெரும்பு
தூரிற்,
சித்திரையிலாதிரை நாள் வந்து
தோன்றிக்
காசினிமேல் வாதியரை வென்ற
ரங்கர்,
கதியாக வாழ்ந்தருளு மெதிராசா
முன்—

என்று சிறப்பித்துக் கூறியுள்ளார்.

விசிஷ்டாத்வைத சித்தாந்தமானது சுருதிகள், ஸ்ம்ருதிகள் என்ற வேதத்தின் மூலமானதால், சுருதியைப் போல் இதுவும் அனுதியானது. அனுதியான விசிஷ்டாத்வைத சித்தாந்தத்திற்கு குறுகிய நோக்குடைய பிற மதங்களால் ஏற்பட்ட கலக்கத்தைப் போக்கி, எல்லாரும் சுலபமாகக் கைக்கொள்ளத் தக்கதாய், நிலை நாட்டிய பெருமை இராமானுஜரையே சாரும்.

இராமானுஜர் விசிஷ்டாத்வைதம் என்ற புதிய மதத்தை ஏற்படுத்தவில்லை. இருப்பினும் புதுமைக்குப் புதுமையாயும், பழமைக்குப் பழமையாகவும் இருந்த சித்தாந்தம் என்று சொல்லும்படி, தன் வாக்கு வன்மையினுலும், புனித சொற்பொழிவுகளினுலும், 'ஸ்ரீ பாஷ்யம்' என்ற வியாக்யான நூல்களினுலும் உயிர்சத்தும், ஊட்டச் சத்தும் கொடுத்து, இச்சித்தாந்தத்தை பிராணப் பிரதிஷ்டை செய்து வைத்தார் என்பதே பொருத்தமாகும். இராமானுஜர் காலத்திற்கு, வெகு காலம் முன்பே, வியாசர், போதாயனர், குஹதேவர், பாருசி, ப்ரம்ம நந்தி, டங்கர், த்ரமிடாசார்யர் போன்ற மஹான்களின் காலத்திலும் இந்த சித்தாந்தம் பரவியிருந்தது. தவிர பழந்தமிழ் இலக்கியங்களான பரிபாடல், தொல்காப்பியம், சிலப்பதிகாரம் போன்ற நூல்களிலும், விஷ்ணுவை பரம்பொருளாகக் கொண்டு இச்சித்தாந்தம் இருந்து இருக்கிறது என்பதற்கு சான்றுகள் உள்ளன.

இராமானுஜர் துறவறம் மேற்கொண்டு பாரததேச முழுவதும் திக்விஜயம் செய்து, தம்முடைய புனித பொன்னுரைகளினுலும், பேரன்பினுலும் நம் நாட்டின் இதயத்தில் இடம் பிடித்துக் கொண்டார் என்றுல் அது மிகையாகாது.

'உடல் மிசை உயிரென கரந்தெங்கும் பரந்துளன்' என்கிறுர் நம்மாழ்வார். உடலுக்கு உயிர் போல், உலகங்களுக்கெல்லாம் உயிராக இருப்பவன் பரமாத்மா. இதனுல் உலகனைத்தும் உய்யுமாறு காத்து நிற்கும் அருள் இறைவனுடையத்தாகும். இப்பரம்பொருளை, 'விஷ்ணு, நாராயணன்' என்கிறது விசிஷ்டாத்வைதம். பகவானை அடைய அவனுடைய அருளே உபாயம். பக்தியும் சரணுகதியுமே உயிர் நாடியாகக் கொண்ட கைங்கர்யமே வழி. இதனுல் அருளே இறைவனது சொரூபம் என்பதும், அன்பே அடியார்களுக்குரியது என்பதும் நிலை நிறுத்தப்படுகிறது. இராமானுஜரின் பொன்னுரைகளில் இவை சில.

இவ்வாறு அடியார்களுக்கு அறிவுரைகள் வழங்கியும், அன்பினுல்

திி. திி. தேவஸ்தானத்தாரின்

## ஸ்ரீ பத்மாவதி தாயார் திருக்கோயில், திருச்சானூர்

### தினசரி நிகழ்ச்சி நிரல்கள்

காலை

5-00 முதல் 5-30 வரை—சுப்ரபாதம்
5-30 ,, 6-00 ,, —ஸகஸ்ரநாம அர்ச்சனை ரூ. 6-00
(நான்கு நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்)
6-00 ,, 6-30 ,, —சுத்தி—முதல்மணி
6-30 ,, 11-30 மதியம்—ஸர்வதரிசனம்
11-30 ,, 12-30 ,, —சுத்தி, 2-வது மணி
12-00 ,, 6-00 மாலை —ஸர்வதரிசனம்
6-00 ,, 6-30 ,, —சுத்தி, 3-வது மணி
6-30 ,, 9-15 இரவு —ஸர்வதரிசனம்
9-15 ,, 9-30 ,, —சுத்தி, ஏகாந்தசேவை

### வெள்ளிக்கிழமைகளில்

காலை

9-00 ,, 10-00 ,, —அபிஷேகம் (ரூ. 100/- செலுத்தி இரு நபர்கள் பங்கேற்கலாம்)
9-00 ,, 10-00 ,, —அபிஷேக தரிசனம்
(ரூ. 2/- நபர் ஒருவருக்கு)

### ஆர்ஜிதக் கட்டண விவரங்கள்

1 தரிசனம்—சிறப்பு நுழைவுக் கட்டணம் ரூ. 5/- (நபர் ஒருவர்க்கு)

| ஆர்ஜித நைவேத்தியங்கள் | | | ஆர்ஜித சேவைகள் | |
|---|---|---|---|---|
| (அ) பொங்கல் | ,, | ரூ. 110/- | (அ) திருச்சி உற்சவம் | ரூ. 63-00 |
| (ஆ) புளியோரை | ,, | ரூ. 100/- | (ஆ) யானை வாகனம் | ரூ. 82-00 |
| (இ) தத்யோதனம் | ,, | ரூ. 75/- | (இ) தோலோற்சவம் | ரூ. 160/- |
| (ஈ) கேஸரிபாத் | ,, | ரூ. 180/- | (வெள்ளிக்கிழமைகளில் மட்டும்) | |
| (உ) சர்க்கரைப் பொங்கல் | ,, | ரூ. 135/- | (ஈ) திருப்பாவாடை (கிருஹஸ்தர்க்கு 5 கிராம் எடையுள்ள வெள்ளிடாலர் கொடுக்கப்படும்) | ரூ. 2000/- |
| (ஊ) தோசை | ,, | ரூ. 300/- | (அர்ச்சனை(அஷ்டோத்ரம்)செய்ய விரும்பும் பக்தர்கள் அதற்கான ரூ. 1-50க்கான டிக்கெட்டினைக் கோயிலிலேயே வாங்கிக் கொள்ளலாம். இதுபோது பக்தரின் பெயரும், கோத்ரமும் வாசிக்கப்படும்) | |
| (எ) ஸாகரபாத் | ,, | ரூ. 150/- | | |
| (ஏ) ஸீரா | ,, | ரூ. 300/- | | |

* திருப்பதியிலிருந்து 5 கி. மீ. தொலைவிலுள்ள திருச்சானூருக்குப் போய்வர பேருந்து வசதியுண்டு.

யாவரையும் ஆதரித்துக் கொண்டு, துறவியாக இராமானுஜர் ஸ்ரீரங்கத்தில் வசித்து வந்தார். துறவியானபடியால் தினமும் ஏழு வீடுகளில் பிட்சை எடுத்து அமுது செய்து கொண்டிருந்தார். அது சமயம் கொங்கு நாட்டிலிருந்து (இன்றைய கோவை, பெரியார், சேலம் மாவட்டங்கள்) சுமதி என்ற அந்தணப் பெண், கணவனுடன் கொங்கு நாட்டில் மழையின்மையினுல் பஞ்சம் ஏற்பட்டதின் காரணமாக, ஸ்ரீரங்கத்திற்கு வந்து, ஒரு வீட்டின் மாடியில் குடியிருந்து வந்தாள். அந்த அம்மையாருக்கு, இராமானுஜர் தினமும் பிட்சை எடுத்து உண்டு வந்தது அதிசயமாக இருந்தது. ஏனென்றுல் அகளங்கன் போன்ற அரசர்களும், செல்வர்களும், படித்த பண்டிதர்களும், மற்றவர்களும் துறவியின் மடத்தில், வாசல் காக்கும் பணிபோன்ற பல பணிகளைத் தமக்கு வாய்த்த பெரும் பேருக மதித்து சேவை செய்து வரும்போது, மடத்தின் தலைவர் மட்டும் ஏன் பிட்சை எடுத்து உண்ண வேண்டும் என்பதுதான், கொங்கு நாட்டிலிருந்து வந்த அம்மையாருக்கு அதிசயமாக இருந்தது. இதை அவரிடமே கேட்டு விடுவது என்று தீர்மானித்திருந்தாள். மறுநாள் இராமானுஜர் பிட்சைக்காக வந்து கொண்டிருந்தபோது, அம்மையார் சடக்கென, மாடியிலிருந்து இறங்கி வந்து இராமானுஜர் வரும்போது கையை குறுக்காக நீட்டி வழியைத் தடுத்தாள். இராமானுஜரும் திகைத்துப் போய், 'அம்மணீ நீர் ஏன் இங்ஙனம் செய்தீர்?' என வினவினுர். அம்மையாரும் 'அடியேனுக்கு ஒரு சந்தேகம், அதைத் தீர்த்துவிட்டுப் போக வேணும்' என்றுள். 'மடத்திற்கு வந்து சந்தேகத்தை தீர்த்துக் கொள்ளலாகாதோ?' என்றுர் இராமானுஜர். அதற்கு அம்மையார், 'மடத்தில் பெரிய மனிதர்களும், மற்றவர்களும், தங்கள் தரிசனத்திற்காகவும், உரையாடுவதற்காகவும் காத்திருக்கின்றனர். தவிர ஸ்திரீயாகிய அடியேனுக்கும் மடத்

திற்கு வந்து பேச சங்கையாய் உள்ளது. தவிர தேவரீருக்கும் அடியேனிடம் பேசுவதற்கு அவகாசம் கிடைக்குமோ என்பதும் சந்தேகம் தான்' என்று சொல்லி பின்வருமாறு இராமானுஜரிடம் விண்ணப்பம் செய்து கொண்டாள். 'தினமும் பிட்சை எடுத்து காலம் கழிக்கும் சந்நியாசியிடம் அகளங்க சோழன் போன்ற மன்னர்களும்,வேத சாஸ்த்ர விற்பன்னர்களும், மற்றும் பல பெரியோர்களும், தங்களுக்கு அடங்கி, ஒடுங்கி, தேவர் அடிக்கீழமர்ந்து காத்திருப்பதைப் பார்க்கையில் அடியேனுக்கு அதிசயமாக உள்ளது. இதன் காரணத்தை விபரமாக அறிய விரும்புகிறேன்' என்றாள். அதற்கு இராமானுஜர், 'அம்மணீ! அரசனேயானாலும், தேவராஜாவேயானாலும், இறைவனைப் பற்றிய உண்மைப் பெரு வார்த்தைகளில் ஒரு வார்த்தையையாவது, உள்ளபடியே செவி கொடுத்து உணரத் தொடங்கி விட்டால், அவர்கள் அந்த உண்மையின் சந்நிதியில், முடி சாய்ந்து வணங்காமலிருக்க முடியாது. சாமான்ய மக்களானாலும், தாழ்ந்தவர்கள் என்று ஒதுக்கப்பட்டவர்களேயானாலும், இறைவனைப் பற்றிய உண்மையை கேட்டு உள்ளத்தில் கொண்டால், அவர்களும் கூட, மன்னர்களும் வணங்கத் தக்க குலத்தினர் ஆகிவிடுகின்றனர்' என்று பதில் சொன்னார். அதைக் கேட்ட அம்மையார், 'ஸ்வாமி அப்படிப்பட்ட அரும்பெரும் பொருளை அடியேனும் கற்று உயர் வாழ்க்கையை பெறும்படிக்கு க்ருபை செய்தருள வேணும்' என்று சொல்லி இராமானுஜரின் திருவடிகளில் வீழ்ந்து வணங்கினாள்.

இராமானுஜரும் அம்மையை எழுந்திருக்கச் செய்து, மடத்திற்கு வரும்படி சொல்லிப் போனார். அவ்வாறே அம்மையும் மடத்திற்குச் சென்று, இராமானுஜருக்காகக் காத்திருந்தாள். இராமானுஜர் வந்ததும், திருவடிகளில் வணங்கி, தன் இதய தாபத்தையும், ஆத்ம தாகத்தையும் விண்ணப்பம் செய்து கொண்டாள். இராமானுஜரும் மனமுவந்து கொங்கு நாட்டு அம்மைக்கு, பஞ்ச சம்ஸ்கார பூர்வமாக, 'த்வயத்தை'யும் உபதேசித்து, இறைவனைப் பற்றிய பெரு வார்த்தைகளையும் உபதேசித்தருளினார். பின்னும் அம்மையார் கொங்கு தேசத்திலிருந்து வந்தவள் என்பதை அறிந்து கொண்டிருந்தபடியால், 'கொங்கர்கோன் குலசேகரன்' என்ற திவ்ய பிரபந்த வாக்கு அவருக்கு நினைவுக்கு வந்து, 'உங்கள் நாட்டு குலசேகராழ்வார், நம்மை ஆட்கொண்டவர்களில் ஒருவர். அந்த கொங்கு நாட்டின் தொடர்பை நீர் பெற்றுள்ளீர். அவருடைய சம்பந்தத்தை நாம் நேரே பெறுவிடினும், அவர் நாட்டு சம்பந்தத்தையாவது நீர் நமக்கு பெறச் செய்தபடியால் உமக்கு, 'கொங்குப் பிராட்டி' என்ற தாஸ்ய நாமம் இருக்கக்கடவது' என்று அருளிச் செய்து அம்மையாரைச் சீடராகவும் ஏற்றார்.

சில காலம் சென்ற பிறகு, கொங்கு நாட்டில் நல்ல மழை பெய்து, பஞ்சமும் நீங்கிவிட்டது என்ற செய்தி கொங்கு நாட்டுத் தம்பதிகளுக்குக் கிடைத்தது. அவர்களும் தங்கள் சொந்த நாட்டிற்குச் செல்ல விரும்பினர். கொங்குப் பிராட்டியும், தன் கணவரிடம் தான் இராமானுஜரிடம் சென்று சேவித்து, சொந்த நாட்டிற்குச் செல்ல அனுமதி வாங்கி வருவதாகச் சொல்லி, இராமானுஜரைக் காண மடத்திற்குச்சென்று காத்திருந்தாள். சிறிது நேரத்தில், தாயைத் தேடி வரும் சேய்போல், அவரும் கொங்குப் பிராட்டியை நோக்கி வந்துவிட்டார். ஆனந்தமும் ஆச்சரியமும் அடைந்த அந்த அம்மாள் இராமானுஜரை வணங்கி, 'ஸ்வாமீ அடியோங்கள் நாட்டில் நல்ல மழை பெய்து பஞ்சமும் நீங்கிவிட்டதாம். அடியேன் பர்த்தாவோடு எங்கள் நாட்டிற்குச் செல்ல விடை தந்தருள வேணும். அப்படியே அடியேனும் தேவரீரை நித்யமும் சேவித்துக் கொண்டிருக்கும்படி க்ருபை செய்து ஏதேனும் ஒரு அடையாளத்தையும் கொடுத்து, முன் உபதேசித்தருளிய மந்த்ரத்தையும் மறுமுறையும் உபதேசித்தருள வேணும்' என்று விண்ணப்பம் செய்து, அவர் திருவடிகளில் வீழ்ந்து வணங்கினாள். இராமானுஜரும் மனமகிழ்ந்து, தம்முடைய திருவடி நிலைகளை கொடுத்து 'த்வயத்தையும் வாக்ய குரும்பரா பூர்வமாக மறுபடியும் உபதேசித்து அனுக்ரஹம் செய்தார். கொங்குப் பிராட்டியும் உபதேசம் பெற்றுக் கொண்டு, இராமானுஜரை வணங்கி, அவரது திருமேனி அழகை தன் மனக்கண்ணாடியில் பதித்துக்கொண்டு பர்த்தாவுடன் சொந்த நாட்டிற்குச் சென்றாள்.

சில ஆண்டுகள் கழித்து, இராமானுஜருக்குச் சோழ மன்னனால் ஏற்பட்ட இடையூறு காரணமாக, இராமானுஜர், கூரத்தாழ்வான் நியமனப்படி, ஆழ்வானின் வெள்ளை ஆடைகளை தரித்துக் கொண்டு, ஆழ்வானுக்குத் தன் காஷாய ஆடைகளைக் கொடுத்து விட்டுச் சில சீடர்களுடன், காவிரிக் கரையோரமாக ஐந்து நாட்கள் பிரயாணம் செய்து, அந்தி வேளையில் ஒரு மலைச்சாரலுக்கு அருகில் உள்ள வேடச்சேரிக்கு வந்தனர். அவர்கள் தங்களை நல்லான் வம்சம் என்றும் தங்களுக்கு குரு 'இராமானுஜர்' தாம் என்று கூறக் கேட்க, சீடர்களுக்கும், இராமானுஜருக்கும், திக்கும் திசையும் தெரியாத இடத்தில், பகவத் க்ருபையால் உதவி கிடைத்ததையும், தன் ஸம்பந்தம் பெற்றவர்களையும் பார்த்ததற்கு, பகவானை நெஞ்சார வாழ்த்தினர். வேடர் கூட்டத் தலைவனும் அவர்களை அருகில் இருந்த அக்ரஹாரத்திற்கு அழைத்துச் சென்று ஓர் அந்தணர் வீட்டில் விட்டு வந்தான். அந்த வீட்டு அம்மையார் எல்லோரையும் வரவேற்று உபசரித்து, அமுது செய்தருளும்படி வேண்டிக் கொண்டாள். விருந்தினர்கள் வேண்டாம் என்று

ஒரு மாதிரியாக பதில் சொன்னார்கள். உடனே அந்த அம்மையாரும் 'சங்கை வேண்டாம், அடியேனும் இராமானுஜரின் ஸம்பந்தம் பெற்றவள்தான்' என்றும், தன்னைக் 'கொங்குப் பிராட்டி' என்று இராமானுஜர் அளித்திருந்த தாஸ்ய நாமத்தையும், ஆத்ம ஸம்ரக்ஷணார்த்தமாக பாதுகைகளைத் தனக்கு அளித்திருப்பதாயும் தெரியப்படுத்தி, அவர்கள் திருவடிகளில் வணங்கினாள். இராமானுஜருக்கும் பழைய நினைவுகள் கனவு போல் வந்தன. பல ஆண்டுகள் கழிந்து விட்டபடியால் கொங்குப் பிராட்டியை உடனே தெரிந்து கொள்ள முடியவில்லை. காவி உடை இல்லாத காரணத்தால், கொங்குப் பிராட்டியும் இராமானுஜரை அடையாளம் கண்டு கொள்ள முடியவில்லை. தான் அளித்ததாகச் சொன்ன பாதுகைகளைக் கொண்டு வரும்படி செய்து, இராமானுஜர் தன் திருவடிகளில் போட்டுப் பார்த்தும், தான் உபதேசித்த மந்த்ரங்களை தன் செவியில் கூறுமாறு சொல்லியும், பின்னும் கொங்குப் பிராட்டியின் ஆசார அனுஷ்டானங்களை பரிசோதித்து திருப்தி அடைந்து, உடன் வந்தவர்களை அமுது செய்யும்படி நியமனம் செய்து, தான் சந்நியாசியாகையாலே ஸ்திரீ பாகம் கூடாது என்ற நியதியின்படி பழம் ஸ்விகரித்துக் கொண்டார். மறுநாள் கொங்குப் பிராட்டியும் தன் பர்த்தாவுடன் தெண்டன் சமர்ப்பித்து, தன் பர்த்தாவுக்கும், பஞ்ச ஸம்ஸ்காரங்களைச் செய்து, சீடராக ஏற்றுக் கொள்ளவேணும் என்று பிரார்த்தித்துக் கொண்டாள். இராமானுஜரும் கொங்குப் பிராட்டியின் பர்த்தாவுக்கு பஞ்ச ஸம்ஸ்காரங்களைச் செய்துவைத்து,'கொங்கிலாச்சான்' என்ற தாஸ்ய நாமத்தையும் கொடுத்தார். பிறகு கொங்கிலாச்சான், கொங்குப் பிராட்டி தம்பதிகள் விருந்தினர்களை உபசரித்தும், அமுது செய்வித்தும், தாங்களும் பாகவத சேஷத்தையும், ஸ்ரீ பாத தீர்த்தத்தையும் ஸ்வீகரித்துக்கொண்டனர். இராமானுஜரும் தன் பாதுகைகளை ஆராதித்து வரும்படி கொடுத்திருந்தபடியால், கொங்கிலாச்சானை எழுபத்தி நான்கு ஸிம்மாஸனாதிபதிகளில் (ஆசார்யர்களில்) ஒருவராக நியமனம் செய்து, வைஷ்ணவ சித்தாந்தத்தை நன்கு பேணி, காத்தும், பரவச் செய்தும் வரும்படி அனுக்ரஹம் செய்தார். பிறகு அவர்களிடமிருந்து மறுபடியும் காஷாய வஸ்த்ரங்களை வாங்கித் தரித்துக் கொண்டு, தன் சீடர்களுடன் மைசூரை நோக்கி பிரயாணம் செய்தார் என்று குருபரம்பரா ப்ரபாவங்கள் தெரிவிக்கின்றன.

இராமானுஜர் கொங்குப் பிராட்டிக்குத் திருவடிகளைக் கொடுத்த விஷயம், அவர் காலத்திலேயே அநேகமாக தமிழ்நாடு முழுவதும் தெரிந்து இருந்தது என்பதை, 'திருக்கோளூர் பெண் பிள்ளை ரகஸ்யம்' என்னும் நூலிலிருந்தும் தெரிகிறது. இது இராமானுஜர் பாண்டிய நாட்டில் சஞ்சாரம் செய்து கொண்டிருந்ததையும் அவர் திருக்குருகூரிலிருந்து, திருக்கோளூருக்குப் போய்க் கொண்டிருந்த போது, திருக்கோளூரிலிருந்து புறப்பட்டு வந்த பெண்ணுக்கும், இராமானுஜருக்கும் நடந்த ஸம்பாஷணையின் 81 சொற்தொடர்களையும் கொண்ட ஒரு தொகுப்பு. இதில் 40வது சொற்தொடர், 'அடி வாங்கினேனோ கொங்கிற் பிராட்டியைப் போல' என்பதாகும். இதிலிருந்து நாம் தெரிந்து கொள்வது யாதெனில், இராமானுஜரின் புகழும், அவரோடு தொடர்புடைய சம்பவங்களும் நாடு முழுவதும் தெரிந்து இருந்தது என்பதற்குச் சான்றாகும். இராமானுஜரும் கொங்குப் பிராட்டியைத் தவிர வேறு எந்த சீடருக்கும், தன் ஞாபகமாக, தன்னுடைய வேறு பொருள்களை கொடுத்ததாக, குரு பரம்பரா பிரபாவங்கள் தெரிவிக்கவில்லை.

ஸ்ரீமத் இராமாயணத்தில், சக்ரவர்த்தித்திருமகனிடமிருந்து,பரதாழ்வான் பாதுகைகளைப் பெற்றதினால் பேரும் புகழும் அடைந்தான். தவிர பாதுகைகளுக்குப் பட்டாபிஷேகம் செய்வித்துப் பேறு பெற்றான். ஸ்ரீமத் வேதாந்த தேசிகனும், எம்பெருமானின் பாதுகைகளை மட்டும் வைத்து, ஒரே இரவில் 'பாதுகா ஸகஸ்ரம்' என்ற 1000 ஸ்லோகங்களைக் கொண்ட ஓர் க்ரந்தம் எழுதியபடியால், ஸ்வாமி தேசிகனின் புகழும் உலக முழுவதும் பரவிற்று. பாதுகைகளின் ப்ரபாவமும் உலகமறிந்தது. அவ்வாறே இராமானுஜரிடமிருந்து கொங்கிற்பிராட்டி திருவடிகளைப் பெற்றதால், ஆசார்ய ஸ்தானமும் கிடைத்து, கொங்கிற் பிராட்டி, கொங்கிலாச்சான் வம்சத்தினரும், இன்று வரையிலும் நன்கு உஜ்ஜீவித்து வருகின்றனர். நாமும் வைணவ சமூகமும் இராமானுஜர் (எம்பெருமானார்) திருவடிகளே சரணம் என்று சொல்லி உஜ்ஜீவிப்போமாக.

(பின்குறிப்பு: இக்கட்டுரையை எழுதியவரும் கொங்கிற் பிராட்டி, கொங்கிலாச்சான் வம்ச பரம்பரையை சேர்ந்தவரே.)

★

## விண்ணப்பம்

தி. தி. தேவஸ்தான கோயில்களில் மற்றும் திருமலை ஸ்ரீ வேங்கடேஸ்வரா கோயிலில் நடைபெறும் ஆர்ஜித சேவைகளுக்காக அனுப்பப்படும் கட்டணத் தொகையினை தேசியமாக்கப்பட்ட வங்கிகளில் மட்டுமே பெறப்பட்ட 'டிமாண்ட் டிராஃப்ட்' (D. D) அல்லது 'பேஆர்டர்' (Pay order) மூலமாக அனுப்புமாறு பக்தர்கள் கேட்டுக் கொள்ளப்படுகிறார்கள். 'செக்' (Cheque)குகளை அனுப்பவதால் கால விரயமும், நிர்வாகச் சிக்கலும் மேலாண்மைக்கு ஏற்படுகின்றது என்பதைத் தெரிவித்துக் கொள்கின்றோம்.

# இராமானுஜரின் சமுதாயப்புரட்சி

**மதமும் மடமையும் :**

மனிதனை இறை நிலைக்கு உயர்த்தும் சாதனமே மதம். இறை நிலை மனிதர்கள் அனைவரும் அடையக் கூடிய நிலையே. மனிதன் மட்டுமல்ல, விலங்குகளும் தெய்வ தரிசனத்தைப் பெற்றதாக நமது புராணங்கள் கூறுகின்றன. அத்தகைய இறை நிலையை அடைய ஒவ்வொரு மதமும் சில உத்திகளை, நியமங்களை வகுத்து அவற்றைக் கடைபிடிப்பதின் மூலம் உயர் நிலையை அடைய வழி செய்கிறது. அவ்வாறு வகுத்த சம்பிரதாயங்கள், சடங்குகள் மனிதனை உயர்த்தித் தாழ்ந்த நிலையில் காணும் பேதங்களைக் கடந்த சமத்துவ கண்ணோட்டத்தை மனிதனிடம் ஏற்படுத்த வேண்டும்.

ஆனால், எல்லாவற்றையும் ஆட்டிப் படைக்கும் அறியாமை மதத்தையும், அது வகுத்த சம்பிரதாயங்கள், சடங்குகள் போன்றவற்றையும்விட்டு வைக்கவில்லை. இதன் விளைவு, மனிதன் மேலும் மேலும் பல பேதங்களை உருவாக்கிக் கொண்டு மனித சமுதாயத்தில் புதிய சுவர்களை உண்டாக்கி வேறுபாடுகளை வளர்த்துக் கொள்கிறன். இவ்வாறு மனிதன் எழுப்பிக் கொண்ட மடமைச் சுவர்களில் ஜாதியும் ஒன்று. மனிதன் எழுப்பிக் கொண்ட மடமைச் சுவர்களே அவன் ஆன்மீக பயணத்திற்குத் தடையாக அமைகின்றன.

இவ்வாறாக வளர்ந்துவிட்ட மடமைத் தடைகளைத் தகர்த்து மானுட வர்க்கத்தை ஒருங்கிணைந்து ஆன்மீகப் பயணத்தை ஊக்குவிக்க நமது நாட்டில் சம காலத்தில் எழுந்த இயக்கங்களே மறுமலர்ச்சி அல்லது சீர்திருத்த இயக்கங்கள். இவ்வியக்கங்கள் சம காலத்தில் (பிற்காலத்தில்) அறிவுறுத்திப் பரப்பிய கருத்துக்களைப் பக்தி இயக்க காலத்திலேயே மாமுனி மதகுரு ஸ்ரீ இராமானுஜர் போதித்து, தானே கடைபிடித்துச் சமுதாயத்தில் நடைமுறைப்படுத்தவும் செய்தார். சமய வளர்ச்சியோடு சமுதாய வளர்ச்சியை ஒருங்கிணைத்துப் பின்னாளில் உருவாகிய மறுமலர்ச்சி இயக்கங்களுக்கு முன்னோடி இராமானுஜர் என நிறுவுவதே இவ்ஆய்வறிக்கையின் நோக்கம்.

'என்னைப் பொறுத்த வரையில் அனைவரும் சமம். உயர்வு தாழ்வு கிடையாது. ஜாதியில் உயர்ந்தவர், தாழ்ந்தவர், அறிவோர், எளியோர் என்று நான் வேறுபாடு காட்டுவதில்லை' எனக்கூறி விரிந்த மனப் போக்குடன் கூடிய ஆன்மீக ஒருமைப் பாட்டைத் தன் வாழ்க்கை நடைமுறையாகக் கொண்டவர் இராமானுஜர். ஆனால் அவர் துணைவியார் தஞ்சமாம்பாளோ குறுகிய ஆச்சார வட்டத்துள் சிக்குண்டவர். இதன் காரணமாகப் பலமுறை இராமானுஜர் அவமானமும் வருத்தமும் பட்டிருக்கிறார்.

**ஆச்சாரம், அவமதிக்கவா?**

திருக்கச்சி நம்பி என்னும் அந்தணரல்லாத ஒருவரைத் தனது ஆசானாக ஏற்றவர் இராமானுஜர். வர்ண தர்மத்தை மனதில் கொண்டு ஆசானாக இருக்கத் தயங்கிய திருக்கச்சி நம்பியிடம் 'அடியேனின் குடிசையில் ஒரு நாள் அமுதுண்டு அந்த சேஷத்தையேனும் பெரும் பாக்கியமாக அடியேனுக்குக்கிட்ட வேண்டும்' என வேண்டினார். ஆசானை அமுதுண்ன அழைத்த சேதியை மனைவியிடம் கூறினார். அவரை அழைத்து வர ஒரு பாதையில் இராமானுஜர் செல்ல, வேறு பாதையில் திருக்கச்சி நம்பி இராமானுஜர் இல்லம் அடைந்து இறை பணி செய்ய கடிதில் செல்ல வேண்டி உணவு பரிமாறக் கேட்டு இராமானுஜர் வரும் முன் உண்டு விடையும் பெற்றார். தாம் தேடிச் சென்ற ஆசான் முன்னமே தம் இல்லம் சென்றதறிந்து விரைந்து பார்க்கும் கால், திருக்கச்சி நம்பி சாப்பிட்ட இலையைக் குச்சியால் தள்ளி, இடத்தைச் சாணத்தால் மெழுகி, தீட்டு போக தீர்த்தமாடி நின்ற துணைவியைக் கண்ட இராமானுஜர் அனவிடைப் புழுவெனத் துடித்தார். வார்த்தைகளால் வெடித்தார். இராமானுஜர் இல்லறம் துறந்து துறவு மேற்கொள்ள இஃது ஒரு முக்கிய காரணமாக அமைந்தது.

---

**திரு நா. பாஸ்கரன்-திருச்சி.**

---

அந்தணரல்லாத ஒருவரை ஆசானாக ஏற்றதும் ஆச்சாரம் பார்த்து அவமதித்துவிட்ட மனைவியை வெகுண்டு வெறுத்தொதுக்கியதும் வேறுபாடு பாராட்டுவதில்லை என்ற நெறிமுறையைத் தன் வாழ்விலேயே நடைமுறையாக்கியவர் இராமானுஜர் என்பதை இந்நிகழ்ச்சி உணர்த்துகிறது.

**கோபுர உபதேசம் :**

சமுதாயத்தை ஒதுக்கிவிட்டு ஒரு தனிமனிதன் தான் மட்டும் மோட்சம் பெற வழிநாடிச் செல்வதை இராமானுஜர் ஆதரிக்கவில்லை.

'என் மோட்சத்தையும் நான் தியாகம் செய்யத் தயார், அதனால் பிறர் நன்மை அடைவார்களானால்' எனக் கூறும் இராமானுஜர் வைணவத்தின் ஜீவாதாரமான திவ்ய மந்திரத்தின் உட்பொருளைச் சரியானபடி உணர்ந்து கொள்ள திருக்கோஷ்டியூர் நம்பியை நாடுகிறார். பதினேழு முறை முயன்றும் இரகசியம் எனக் கருதப்படும் திவ்ய மந்திர உட்பொருளைச் சொல்ல மறுத்த திருக்கோஷ்டியூர் நம்பி, கடைசியாக ஒரு வாக்குறுதியை வாங்கிக் கொண்டு

மந்திர உட்பொருளை இராமானு ஜருக்கு அருளுகிறார்.

'திவ்ய மந்திர இரகசியத்தை உணர்ந்தவர் நிச்சயமாக வீடு பேற்றை அடைவர். அதனால்தான் கண்டவர்களுக்கும் திருமந்திர இரகசி யத்தை அறிவித்து அதை மலிவாக்கி விடுவதில்லை. இந்த மந்திர இரகசி யத்தை வேறு யாருக்குமே வெளி யிடக் கூடாது' என்பதே அந்த வாக் குறுதி.

மந்திர இரகசியத்தை அறிந்த இராமானுஜர் ஆழ்ந்து யோசித்தார். தான் பெற்ற பேற்றை உலகம் பெற வேண்டும் என நினைத்தார். அதற் காக, தாம் குருவுக்கு அளித்த வாக் குறுதியை மீறுவது என முடிவெடுத் தார். கோயில் கோபுரத்தின்மீது ஏறி நின்றார். மக்களைக் கூவி அழைத் தார். திவ்ய மந்திர உட்பொருளை மக்களுக்குப் பறை சாற்றினார். இந் நிகழ்ச்சி அது நாள் வரை பண்டித வர்க்கத்தின் தனிவுடமை எனக் கிடந்த ஆன்மீக இரகசியங்கள் பொது வுடமை படுத்தப்பட்டதின் பிர கடனமோ என நம்மை வியக்க வைக் கிறது. இராமானுஜரின் இந்தக் கோபுர உபதேசம் பண்டித வர்க்கத் தோடு மட்டும் நின்றுவிடாமல், மதம் பாமர மக்களையும் சென்றடைய வேண்டும் என்ற நோக்குடன் 'மதம் கடைவீதிகளையும் காய்கறி நறுக்கும் அடுக்குகளையும் சென்றடைய வேண் டும்' என்ற விவேகானந்தரின் வீர முழக்கத்தை நமக்கு நினைவுறுத்தும் இந்நிகழ்ச்சி விவேகானந்தர் காலத் திற்கும் முந்தையது என என்னும் போது பிற்காலத்தில் தோன்றிய புரட்சிக் கருத்துக்களுக்கு அன்றே இராஜபாட்டை அமைத்து சமூகத் தில் உலவவிட்டுப் பார்த்து மகிழ்ந் தவர் இராமானுஜர் என்பது தெளி வாகிறது.

வைணவப் பெரியோர் பலரை அதிர்ச்சியுறச் செய்தது இப்புரட்சி. கடும் சினம் கொண்ட திருக்கோஷ்டி யூர் நம்பி 'குருத் துரோகத்துக்கு என்ன பலன் கிட்டும் தெரியுமா?' என வினவ 'தெரியும், எனக்கு நரகம் சம்பவிக்கும்' என பதில் மொழிந் தார் இராமானுஜர்.

'நான் மட்டும்தான் நரகத்துக்குப் போவேன் என்பது சரி. திவ்ய மந்திர இரகசியத்தை விளக்கிக் கொண்ட ஆயிரக்கணக்கான மக்களுக்கு வீடு பேறு கிடைக்குமல்லவா! அதற்காக நான் நரக வாழ்வை விரும்பி ஏற்றுக் கொள்கிறேன்', என பொறுமை யுடன் விளக்கினார். இராமானுஜரின் இந்த விளக்கம், திகைப்பும் வியப்பும் தந்ததுடன் இறைவனுடைய கருணை ஆட்சியின் கீழ் மக்கள் அனைவரும் ஒன்றுதான் என்பதையும் ஒரு சிலர் பெரும்பாலான மக்களைப் புறக் கணித்துவிட்டுத் தந்திரமாக மோட்ச பேற்றை அடைய முயல்வது இறை வனுக்கே செய்யும் துரோகமல்லவா என்ற உண்மையையும் விளக்கியது. உண்மைதந்த பரவசத்துடன் இராமா னுஜரை ஆரத்தழுவி 'விசிஷ்டாத் வைதம் இனி உம் பெயரால் இராமா னுஜ சித்தாந்தம் என வழங்கட்டும்' என்று திருக்கோஷ்டியூரார் வாழ்த் தினார்.

அரிசன ஆலயப் பிரவேசம் :

இராமானுஜர் திருவரங்கத்திலிருந்து மைசூர் செல்ல நேர்ந்தபோது, யாத வாத்திரி எனும் துளசிக்காட்டில் புற்றிலிருந்து வெளிப்பட்ட சிலையை மூலவராக வைத்துத் திருநாராயண புரம் கோயிலை நிர்மாணித்தார். அக் கோயிலுக்கு உரிய உத்சவர் டில்லி முஸ்லீம் மன்னனிடம் இருப்பதறிந்து டில்லி சென்று கோரிப் பெற்றபோது 'செல்வப்பிள்ளை' எனப்படும் உற் சவர் குழந்தை வடிவத்தில் நடந்து வந்து இராமானுஜர் மடியமர்ந்த தாகச் சொல்லப்படுகிறது. இவ் உத் சவர், 'செல்வபிள்ளை' முஸ்லீம் மன் னனின் மகள் இளவரசியின் உள்ளத் தைக் கொள்ளை கொண்டவர். அந்த இறைவனின் சிலையை டில்லியிலிருந்து கொண்டு வரும் வழியில் பல அபாயங் களை எதிர் கொள்ள வேண்டியிருந் தது. அவரையும் சிலையையும் சண் டாளர்கள் எனப்பட்ட தாழ்ந்த இனத் தவர் உறுதுணையாக இருந்து காத் தனர். இறைவனைத் தொழ அவா விருந்தும் ஆலயம் புகுந்து தொழ முடியாத தங்கள் குடிப்பிறப்பைக் கூறி வருத்தமுற்றனர்.

'எல்லா உயிர்க்கும் பிறப்பு ஒன்று தான், உயர்ந்தவன் யார்? தாழ்ந் தவன் யார்? மேல் குலத்தவன் யார்? கீழ் குலத்தவன் யார்? பிறப்பினால் உயர்வோ, தாழ்வோ கூறக்கூடாது' என்று கூறி வைதீகர்களின் எதிர்ப் பையும் மீறித் தாழ்த்தப்பட்ட, தீண் டாத குலத்தவர்க்கு 'திருக்குலத்தார்' எனப்பெயரிட்டு வாழ்த்தித் தானே முன் நின்று அவர்களைத் திருநாரா யணபுரம் கோயிலுக்குள் அழைத்தும் சென்று அரிசன ஆலயப் பிர வேசத்தை இந்தியாவில் முதன் முதலில் துவக்கி வைத்த பெருமை யும் இராமானுஜரையே சாரும்.

சமத்துவ முன்னோடி :

தொண்டனூர் ஏரியை அமைத்து அனைத்து மக்களும் இனவேறுபாடின்றி நீர் எடுக்க வழிவகுத்து, குடிநீருடன் ஜாதிப் பிரச்சனையையும் தீர்த்தவர் இராமானுஜர்.

திருவரங்கத்தில் பல குலத்தவரும் உள்ளடக்கிய தனது பன்னிரண்டா யிரம் பக்தர்க்கும் சமபந்தி போஜன வைபவத்தை அந்நாளிலேயே நடத்திக் காட்டி சமுதாய சீர்திருத் தத்தை, புரட்சியை நடத்திக் காட்டி யவர் இராமானுஜர். பின்னாளில் உருவான சமூக சீர்திருத்தக் கருத்துக் களாகிய தீண்டாமை ஒழிப்பு, அரிசன ஆலயப் பிரவேசம், சம உரிமைக் கோட்பாடு போன்ற பலவற்றின் உயர்வை உணர்ந்தது மட்டுமன்றி செயல்படுத்தியும்காட்டிப்பின்னாளில் உருவான சமூக மறுமலர்ச்சி இயக்கங் களுக்கு ஒரு முன்னோடியாகத் திகழ்ந் தவர் இராமானுஜர்.

卐

# தமிழ் நாட்டில் வைணவம் - தோற்றமும் வளர்ச்சியும்

பாகவத புராணம் :

திருமாலின் திருவவதாரத்துள் முதன்மை இடத்தைப் பெற்ற கண்ணன் அவதாரப் பெருமையையும், பல்வேறு வைணவ சமயக் கொள்கைகளையும் விளக்குவதற்காகத் தமிழ் நாட்டைச் சேர்ந்த சமஸ்கிருத அறிஞர் கி. பி. ஒன்பதாம் நூற்றுண்டு அளவில், 'பாகவத புராணத்தை' வடமொழியில் இயற்றியுள்ளார். அதில் ஆழ்வார்களின் தாக்கம் பேரளவிற்குக் காணப்படுவதாக அறிஞர்கள் சுட்டிக் காட்டியுள்ளனர். (பாகவத புராணத்தின் காலத்தை கி. பி. ஆறும் நூற்றுண்டு முதல் கி. பி. பத்தாம் நூற்றுண்டு வரை கொண்டு செல்வர். அந்நூலினுள் அத்வைத கருத்துக்கள் காணப்படுவதால், எட்டாம் நூற்றுண்டிற்குப் பிற்பட்டதாகக் கொள்ளுவதே பொருந்தும். காண்க: 'TheSocial teachings of Bhagavada Purana' (By.T.J. Hopkins) in Krishna Myths Rites and Attitudes pp. 4-6).

இவ்வாறு தமிழ் நாட்டில் தோன்றிய பக்தி நெறி பாகவத புராணத்தின் மூலமும், அடியார்கள் மேற்கொண்ட புனித யாத்திரைகள் மூலமும் வட இந்தியாவில் சென்று பரவியது.

"பக்தி நெறி தமிழகத்தில் தோன்றியது!
மராட்டியத்தில் வளர்ந்தது!
குஜராத்தில் மலர்ந்தது!
இராஜபுதனத்தில் இருளகற்றியது!
வங்காளத்தில் வான்புகழ் கொண்டது!

என்று வடமொழியில் உள்ள பவிஷ்ய புராணம் போற்றுகிறது (க. த. திருநாவுக்கரசு, வரலாற்று வஞ்சி ப. 49).

நாதமுனிகளின் நற்பணி :

கி. பி. ஒன்பதாம் நூற்றுண்டின் இறுதியிலும் பத்தாம் நூற்றுண்டின் தொடக்கத்திலும் வாழ்ந்தவர் நாதமுனிகள். பல்வேறு கோயில்களில் பாடப்பட்டு வந்த பாசுரங்களைச் செவிமடுத்து, அவற்றை ஒன்றுகத் தொகுக்க அவர் ஆவல் கொண்டார். அவருடைய அரிய முயற்சியால், தமிழுலகம், 'நாலாயிர திவ்வியப் பிரபந்தம்' என்னும் திருமறையைப் பெற்றது.

சோழ அரசர்கள் வழங்கிய செப்பேடுகளுள் மிகவும் காலத்தால் முற்பட்டது அன்பில் செப்பேடு. இராசராச சோழனுடைய தந்தையாகிய இரண்டாம் பராந்தகச்சோழர் (கி.பி. 957-970), தம்முடைய அமைச்சரான அநிருத்த பிரமாதிராஜன் என்பவருக்குக் கருணைகரமங்கலம் எனும் ஊரினை இறையிலாயாக கி. பி. 967 அளவில் தானமாகக் கொடுத்ததை அன்பில் செப்பேடு அறிவிக்கின்றது. அதில் அமைச்சர் அநிருத்திரர் மறைந்து விட்ட 'ஸ்ரீநாதர்' எனும் வைணவப் பெரியாரின் சீடர் எனவும் அவர் பரம பாகவதர் எனவும் குறிப்பிடப்பட்டுள்ளார். இச்செப்பேட்டில் குறிப்பிடப்படும் 'ஸ்ரீநாதரே' வைணவ உலகம் போற்றும் நாதமுனிகள் என்று அறிஞர்கள் துணிந்துள்ளனர். (Epi. Indica. vol. 22. No. 12).

இந்தக் குறிப்பினுல் நாதமுனிகள் காலம் யாதாக இருக்கக் கூடும் என்பதை உய்த்துணரலாம்.

இப்பெரியார், ஆழ்வார்களின் அருளிச் செயல்களை நாடு முழுவதிலும் பரப்பும் நற்பணியில் ஈடுபட்டார். வைதிக மதத்தில் இருந்து பாஞ்சராத்ர ஆகம மதம் வேறுபட்டது என்று யாரும் புறக்கணித்தல் கூடாது எனவும், அதனையும் வைதிக மதக் கொள்கையை ஒத்த, வேறொரு சிறந்த கொள்கையாகவே பாவிக்க வேண்டும் எனவும் நாதமுனிகள் பிரசாரம் செய்துள்ளார்.

இவர் 'யோக ரகசியம்' 'நியாய தத்துவம்' எனும் நூல்களை இயற்றியதாகக் கூறுவர்.

நாதமுனிகளே, 'தத்துவத்திரையம்' எனக் கூறப்படும் சித், அசித், ஈசுவரன் ஆகிய முப்பொருள்களை முதன்மையான உண்மைகளாகக் கண்டு பிடித்தார் என்பர். 'கடவுள் நாராயணனே' என்பது அவருடைய சித்தாந்தத்தின் முடிந்த முடிபாகும்.

பேராசியர். க. த. திருநாவுக்கரசு.
சென்னை.

ஆளவந்தாரின் அருந்தொண்டு :

நாதமுனிகளின் சீடரான உய்யக் கொண்டான் என்பார், தம் குருநாதர் தொடங்கிய 'பிரபந்த பிரசார'ப் பணியை தொடர்ந்து செய்துள்ளார். மணக்கால் நம்பி, உய்யக் கொண்டாரின் அந்தரங்க சீடர். நாதமுனிகளின் பேரரான யமுனைத்துறைவருக்கு (ஆளவந்தாருக்கு) ஞானுசிரியராய் மணக்கால் நம்பி விளங்கினர்.

திருவரங்கத்தை இருப்பிடமாகக் கொண்டு, பிரபந்த விளக்கப் பேருரைகளை ஆளவந்தார் செய்து வந்தார். அக்காலத்தில் காஞ்சிபுரத்தில் இராமானுசர் அருட்பணி செய்து கொண்டு இருந்தார். தம்முடைய 'சித்தித்ரயம்' என்ற நூலில் 'தத்துவத் திரையத்திற்கு' எதிராக உள்ள அத்வைதக் கொள்கைளைக் கண்டிக்கிறுர். மகாலட்சுமி வழிபாட்டைச் சிறப்பாகப் போற்றியுள்ளார்.

இவருடைய 'ஆகமப் பிராமாணீயம்' எனும் நூல் பாஞ்சராத்ர ஆகமத்தையும் அதனுடைய கொள்கை

களையும் பரப்புவதற்காக எழுதப் பட்ட நூலாகும். இது பாஞ்சராத் ஆகமத்தை ஆதரித்து எழுதப்பட்ட முதல் நூல். 'ஸ்தோத்திர ரத்தினம்' எனும் நூல் சரணாகதி தத்துவத்தை அறிவுறுத்துகிறது. 'பிரபத்தி சம் பிரதாயத்தில் பிரபக்தி செய்கிறேன்' எனும் சொல்லாட்சியை முதன் முத லாக இந்த நூலில் காணுகின்றோம்.

மகாலட்சுமியைப் போற்றிப் பர வும் 'சதுச் சுலோகி' எனும் நூலும் இவரால் இயற்றப்பட்டுள்ளது. இது தான் வைணவ மரபில், திருமகளை வழிபடும் முதல் நூல்.

'புருஷ நிர்ணயம்' எனும் நூலில், 'நாராயணனே பரம்பொருள்' என் பதை இவர் நிறுவியுள்ளார்.

**இராமாநுசர் :**

இந்தியச் சிந்தனையின் முப்பெரும் சிகரங்களுள், நடுநாயகமாக விளங்கு பவர் இராமாநுசர். திருக்கச்சி நம்பி யைக் குருவாகக் கொண்டு, தத்துவ விசாரணையை இவர் தொடங்கினர். பின்னர், வாழ்க்கையில் உண்டான மனக்கசப்பால் இவர் துறவியானார். ஆளவந்தாரின் அழைப்பை ஏற்று, திருவரங்கத்தில் தங்கி தத்துவ ஆராய்ச்சியில் ஈடுபட்டார்.

இராமாநுசர், பிரம்ம சூத்திரத் திற்கு பாஞ்சராத்திரக் கொள்கைப் பின்னணியில் பெரியதோர் உரை விளக்கம் எழுதினர். இவருக்கு முற் பட்ட உரையாசிரியர்கள் பாஞ்ச ராத்ர ஆகமத்தில், வேதத்திற்கு முர ணான செய்திகள் இருப்பதைச் சுட்டி யுள்ளனர். இதனால், இராமாநுசர் காலம் வரையில் ஆகமக் கொள்கை களும் ஆழ்வார்களின் பாசுரங்களும் தமிழ்நாட்டு வைணவத்தில் கலக்க வில்லை என்று தெரிகிறது என்பர். (அக்னிகோத்ரம் இராமாநுச தாதா சாரியார்: வரலாற்றில் பிறந்த வைண வம். ப. 18)

இராமாநுசரே ஆழ்வார்களின் அருளிச் செயல்களை மேற்கொண்டு வைணவக் கொள்கைகளை வளர்த் தவர் என்று 'கோயிலொழுகு' 'வேங் கடாசல இதிகாச மாலை' 'குருபரம் பரைப் பிரபாவம்' முதலிய நூல் கள் குறிப்பிடுகின்றன.

மற்றும் இவர் வளர்த்த ரகசிய சம்பிரதாயத்தில், 'பிரபத்தி தத்து வம்' முதன்மை இடம் பெற்றதாகத் தெரிகிறது.

சூத்திர பாஷியம், கீதா பாஷியம், வேதாந்த சங்கிரகம் என்பன இராமா நுசர் இயற்றிய நூல்களில் முக்கிய மானவை. மூன்று நூல்களும் அத் வைதக் கருத்துகளைக் கண்டிக்கின்றன. உபநிடதத்தில் போற்றப்படும் பிர மத்தைப் புராணங்களில் கூறப்படும் நாராயணனோடு ஒன்றுபடுத்திக் காட்டி விளக்குவதே இவருடைய பெரும்பணியாக இருந்து இருக்கிறது. மற்றும் பரம்பொருளான நாராயண னுக்குப் பத்தினியாக இலக்குமியை யும் பிற சின்னங்களையும் வரை யறுத்து இவர் கூறியுள்ளார்.

ஆழ்வார்களுக்குப் பிறகு, 'பக்தி யினால் மோட்சம் அடையலாம்' என் பதை முதன் முதல் இவரே கூறியுள் ளார். உலகமும், ஆன்மாக்களும் இறைவனுக்கு உடலாக அமைந்து இருக்கின்றன என்பது இவருடைய கொள்கை. 'மோட்சம் என்பது அநு பவ விசேடம்' என்றே இவர் கருதி யுள்ளார். கீதைக்கு எழுதிய உரை யில், 'சரம ஸ்லோக'ம் பற்றிய விளக் கத்தில், பக்திக்கு உயிர்நாடியாக உள்ள 'சரணாகதி' தத்துவத்தையே விரித்துரைத்துள்ளார். 'கத்யங்கள்' எனும் உரை நடை நூல்கள் சிலவற் றையும் இவர் இயற்றியுள்ளார்.

தமிழ் நாட்டு வைணவ சமயத் திற்குப் பாஞ்சராத்ர ஆகம அடிப் படையில் சிறந்தவொரு தத்துவக் கோட்பாட்டை உருவாக்கிக் கொடுத் தவர் இராமாநுசர் என்பதில் கருத்து வேற்றுமைக்கு இடமில்லை.

**ஆசார்ய மரபு :**

இராமாநுசரின் சீடரான பெரிய நம்பி, கூரத்தாழ்வான் போன்றவர் கள் இராமாநுசரின் திருச்செய்தியை நாடு முழுவதிலும் பரப்புவதற்கு அரும்பாடுபட்டனர். கூரத்தாழ் வாரின் மகனான பராசரப்பட்டர் இராமாநுச தரிசனத்தைப் பரப்பும் பணியில் ஈடுபட்டார். இவருடைய சீடர் 'நஞ்சீயர்' என்பார் திருவாய் மொழிக்கு 'ஒன்பதினாயிரப்படி' உரை விளக்கத்தை எழுதியுள்ளார்.

நம்பிள்ளை, மேற்கூறிய நஞ்சீயரின் சீடராவர். நம்பிள்ளை, உபந்யாசத் தைப் பகல் எல்லாம் கேட்டு அதை இரவு வேளையில் நம்பிள்ளையிடம் அனுமதி பெறாமல் தாமே எழுதி வந்தவர் வடக்குத் திருவீதிப்பிள்ளை. இந்த உரை விளக்கமே ஈடு முப்பதா யிரப்படி என்னும் வியாக்கியான மாகும். வியாக்கியானப் பேருரை யாளரான பெரியவாச்சான் பிள்ளை யும், குரு பரம்பரை ஆசிரியரான பின் பழகிய ஜீயரும் நம்பிள்ளையின் சீடர்கள் ஆவர். நம்பிள்ளை கால முதலே தமிழில் நூல்கள் எழுதப் பட்டன.

**வேதாந்த தேசிகர் :**

காஞ்சிக்கு அருகிலுள்ள தூப்புல் என்னும் ஊரில் பிறந்தவர். இவர் வடசொற் கடந்தவர். தென் மொழிக்கு எல்லை தேர்ந்தவர். வேத உபநிடதங்களின் பொருள்களில் தெளிவு பெறத் தமிழ் வேதமாகிய நாலாயிர திவ்யப் பிரபந்தத்தைப் படித்துப்பயன் பெற்றவர். இதனை,

" செய்ய தமிழ் மாலைகள் நாம் தெளிய வோதித்
தெளியாத மறை நிலங்கள் தெளி கின்றோமே!

(அதிகார சங்கிரகம் 2)

என்று தெரிவித்துள்ளார்.

நம்மாழ்வாரிடமும், இராமாநுச ரிடமும் பேரீடுபாடும் பெரும் பத்தி யும் கொண்டவர். மாறன் பணித்த தமிழ் மறை வளர்த்தவர் இராமாநு சர் என்பது இவருடைய கருத்து. வேதாந்த தேசிகர் கி. பி. 1369-ல் பரமபதம் எய்தியதாகக் கூறுவர்.

(40-ம் பக்கம் பார்க்க)



லும் பொதுவாகக் காணப்படும். ஒவ்வொன்றில் ஒவ்வொரு விஷயம் சிறப்பாக இருக்கும்.

மகா புராணங்கள் மொத்தம் பதினெட்டு. அவைகளாவன: 1. பிரம்மம் 2. பதுமம் 3. வைணவம் 4. சைவம் 5. பாகவதம் 6. பவிஷ்யம் 7. நாரதீயம் 8. மார்க்கண்டேயம் 9. ஆக்கியேனம் 10. பிரம்ம வைவர்த்தம் 11. இலிங்கம் 12. வராகம் 14. வாமனம் 14. கூர்மம் 15. காருடம் 16. மத்ஸ்யம் 17. ஸ்காந்தம் 18. பிரம்மாண்டம்.

1. பிரம்ம புராணம்:

இதனில் எட்டு வசுக்கள், ஏகாதச ருத்திரர்கள், பன்னிரண்டு ஆதித்யர்கள், பதினான்கு மநுக்கள், சூரியனின் உற்பத்தி, சரிதம், உபாசனை, சூரிய அஷ்டோத்திர, சத, சகஸ்ர நாமம், சிவசகஸ்ரநாமம், கௌதமி, மான்மியம் முதலியவை இதில் சிறப்பானவை.

# புராணங்கள் புகல்வது என்ன?


திரு. ச. தனசேகரன்
மதுரை-21.


'புராணம்' என்பதற்குப் பழமை என்பது பொருள். எது தொன்று தொட்டு இன்று வரைக்கும் பரவி இருக்கின்றதோ, அதுவே புராணம் என்று வாயு புராணம் கூறுகிறது. அதர்வண வேத காலத்திலே புராண நூல்கள் சிறந்த இலக்கியங்களாகக் கருதப்பட்டு இருக்கின்றன. புராணம் என்னும் சொல் உபநிடதங்களிலும், சாஸ்திரங்களிலும் காணப்படுகிறது. மகாபாரதத்தில் புராணங்களின் பெயர்கள் கூறப்பட்டிருக்கின்றன. கி.மு. 4-ஆம் நூற்றாண்டில் கௌடில்யர் தமது அர்த்த சாஸ்திரத்தில் அரச குமாரர்கள் முக்கியமாகக் கற்க வேண்டிய நூல்களுள் புராணங்களும் ஒன்றாகும் என்று கூறுகிறார். அமரசிம்மன் போன்ற பழைய நிகண்டாசிரியர்கள் புராணம் என்னும் நூல் உலகத் தோற்றம், ஒடுக்கம், மனுவந்தரம், முனி மரபு, அரச மரபு ஆகிய ஐந்து இலக்கணங்களையும் உடையதாக இருக்க வேண்டும் என்று கூறியிருக்கிறார்கள். ஆனால், முற்காலத்துப் புராணங்கள் மட்டுமே இவ்வைந்து இலக்கணங்களையும் உடையனவாக இருக்கின்றன.

இராமாயண, மகாபாரதங்களைப் போல் புராணங்கள் ஒருவரைப் பற்றி மாத்திரம் தொடர்ந்து கூறாமல், பலருடைய வரலாறுகளைக் கூறும். ஒரு புராணத்தில் உள்ள அதே கதை மற்றொரு புராணத்தில் சிறிது மாறுதலுடன் காணப்படும். அது வேறு ஒரு கல்பத்தில் நடந்தால் மாறுதல் இயற்கையேயாம். சிருஷ்டி, மனுவந்தரம், அரச மரபு, தலம், தீர்த்தம், விரதம், மந்திரம், யோகம், பக்தி, ஞானம், கன்மம், துதி, அருச்சனைக்குரிய அஷ்டோத்திர சகஸ்ர நாமம், தருமம், சிவன், விஷ்ணு முதலிய தேவர் அவதாரம், லீலை முதலியவை எல்லாப் புராணங்களிலும் பொதுவாகக் காணப்படும்.

2. பதுமம்:

இப் புராணம் மிகப்பெரியது. 50 ஆயிரம் சுலோகம் கொண்டது. இதில் இராமாயணத் தொடர்புடைய கதைகள்; ஒவ்வொரு மாதத்தின் மகிமை; 25 ஏகாதசிகளுக்கும் தனித்தனி பெயர், கதை; பகவத்கீதை 18 அத்தியாயங்களுக்கும் தனித்தனி கதை; வேதாந்தம், கதாரூபமாக வருணனை முதலியன சிறப்பானவைகள். இதில் உள்ள சுலோகங்களைக் காளிதாஸனும், பவபூதியும் தம் நூலில் சேர்த்திருக்கின்றனர். மேலும் இதனில் கிருஷ்ண அஷ்டோத்ர சத நாமமும், சகஸ்ர நாம



3

மும், சிவ சகஸ்ர நாமமும் காணப் படுகின்றன.

3. வைணவம் :

இதற்கு ஏழு வியாக்கியானங்கள் இருக்கின்றன. இதை வியாசரின் தந்தை பராசரர் செய்தார். இது கிருஷ்ண அவதார லீலைகளை வருணிக்கிறது. யமகீதை, பிதுர்கீதை, அத்து வைதத்தை விளக்கும் சுலோகங்கள் முதலியன இதில் உண்டு. இதன் உத்தரபாதம் மிகப் பெரியது. 115 அத்தியாயம் உள்ள சம்ஹிதை அதில் தான் காணப்படுகிறது.

4. சைவபுராணம் :

இதில் சிவ நாம மகிமை, பஞ் சாட்சரி, சிவயோகம், சிவ பக்தி சரிதம், பரகாயப் பிரவேசம், காசியின் பெருமை, சிவ சகஸ்ரநாமம், சரப அவதாரம் முதலியன சிறப்பானவை. இதில் உள்ள பல சுலோகங்களைக் காளிதாஸன் கையாண்டுள்ளார்.

5. பாகவதம் :

விஷ்ணு பாகவதம், தேவி பாகவதம் என இரண்டு உண்டு. முதலாவது கிருஷ்ண அவதாரம், லீலை, கோபிகைகளின் பக்தி, வேதாந்தம் முதலியவைகளைக் கூறும். தேவி பாகவதம் கன்மம், ஆசாரம், தேவியின் பெருமை, விரதம், காயத்திரி கவசம், காயத்திரி சகஸ்ர நாமம் முதலியவைகளைக் கூறும்.

6. பவிஷ்ய புராணம் :

கலியில் என்ன நேரும் என்பதை இது சிறப்புறக் கூறுகிறது.

7. நாரதீயம் :

பதினெண் புராணச் சுருக்கம், விரதங்கள், வேதபாதஸ்தரம், சங்கீத சாஸ்திரம், ருக்மாங்கத சரிதம் இதில் சிறப்பானவை.

8. மார்க்கண்டேயம் :

தேவி மான்மியம், மதாலஸா என்பவள் மூலமாக இல்லறம், துறவறம், சதாச்சாரம், யோகம், சகுணம் முதலியவைகள் இதனில் மிகச் சிறப்பாக விளக்கப்படுகின்றன.

9. ஆக்னேயம் :

இராமாயண விசேஷம், மருந்து, தநுர் வேதம், விலங்கு மருத்துவம், வசீகரண மந்திரம், நிகண்டு, காவிய நாடக இலக்கணம், ஆலய விக்கிரக அமைப்பு, நம் உடலிலுள்ள நாடிக் கணக்கு, சுவாச கணக்கு முதலியன காணப்படுகின்றன.

10. பிரம்ம வைவர்த்தம் :

இது ராதையின் பிறப்பு, வளர்ப்பு, கோலோகம், க்ஷேத்திர மான்மியம், கனவின் பலன், ராதா சகஸ்ரநாமம் பற்றி கூறும்.

11. இலிங்கம் .

சிவன் இலிங்கமாக இருக்க காரணம், எந்த எந்த அபிஷேகத்தால் எந்த விதமான பலன்கள் உண்டாகும், பசு, பதி, பாசம், சிவ சகஸ்ர நாமம், சிவதீட்சை முதலியன இதில் சிறப்புடன் காணப்படுகின்றன.

12. வராகம் :

தசாவதாரம், அகத்திய கீதை, பிக்ஷு கீதை, உருத்திரகீதை, விலக்கத்தக்க சிவாலய அபசாரங்கள், மரம் வளர்க்க வேண்டிய அவசியம் முதலியன கூறப்பட்டுள்ளன.

13. வாமன புராணம் :

சிவ கதைகள் நிறைந்த புராணமிது. சிறிது வேதாந்தமும் இதில் உண்டு.

14. கூர்மம் :

இதில் வியாச கீதை, ஈசுவரகீதை, தேவி சகஸ்ரநாமம், வேதப் பிரிவு முதலானவைகள் சிறப்பானவை.

15. காருட புராணம் :

இறந்தவர் உயிர் எப்படி யமலோகம் செல்கிறது என்பது இதில் விரிவாகக் கூறப்படுகிறது.

16. மத்ஸ்ய புராணம்

இது பிதுர்லோகம், சிரார்த்தம் அதற்குரிய மந்திரங்கள், கோத்திரம், பிரவரம் முதலியனவற்றைக் கூறுகிறது.

17: ஸ்காந்தம் :

இது கந்தன் திருவிளையாடல்களை வருணிப்பது. ஏழு காண்ட வடிவமாக ஒரு ஸ்காந்தம் உண்டு. ஆறு சங்கிதை வடிவமானது. இதில் ஒன்று உப புராணம்; மிகப்பெரியது. சங்கர சரிதை, ஆக சங்கிதை தவிர மற்றவை அச்சேறவில்லை. இது பல சிறப்புக்களை உடையது.

18. பிரம்மாண்டம் :

இதில் லலிதா தேவியின் சரிதம் விரிவாக இருக்கிறது.

மகா புராணங்கள் பதினெட்டினைத் தொடர்ந்து உபபுராணங்களும் குறிப்பிடப்படுகின்றன. அவைகளாவன : சனத்குமார புராணம், ஸ்காந்த புராணம், காளி புராணம், சிவதரும புராணம், மானவ புராணம், பிரம் மாண்ட புராணம், பராசர புராணம், நரசிம்ம புராணம், துர்வாச புராணம், மகேசுவர புராணம், கௌரி புராணம், மாரீச புராணம் என்பனவாகும்.

சனத்குமாரர், நந்தி துர்வாசர், நாரதர், கபிலர், மனு, சநஸ் எனும் சுக்கிரர், பராசரர், மரீசி ஆகியோர் இயற்றிய புராணங்கள் அவர்கள் பெயர்களுடன் சேர்ந்துள்ளன. மற்றவைகளை இயற்றியவர் வியாசரே. பதினெட்டு மகா புராணங்களுக்கு உதவியாகத் துணையாய் இருப்பதால் உப அங்கம் என்பது போல் உப புராணம் எனப் பெயர்பெற்றன. முக்கிய சிருஷ்டி, இடைக்கால சிருஷ்டி, சந்திர சூரிய வமிசம், 14 மனுவந்திரங்கள், அரச மரபு, முனிவர் மரபு முதலியவைகளை முக்கியமாகக் கூறுவது உபபுராண இலக்கணம். பதினெட்டு மகாபுராணங்களில் இவைகளின் பெயர்களும் குறிப்பிடப்படுகின்றன.

வியாசாய விஷ்ணுரூபாய
வியாச ரூபாய விஷ்ணவே |
நமோ வை ப்ருஹ்ம நிதயே
வாசிஷ்டாய நமோ நம : ||

௨௪ # வேதஜநநீ ௨௦

ருக், யஜுர், ஸாமம், அதர்வணம் என்னும் நான்கு வேதங்களையும் படைத்தவள் பராசக்தியாகிய தேவி யானதால், அவளை வசினி முதலிய வாக்தேவதைகள் "வேதஜநநீ" என்று லலிதா ஸஹஸ்ரநாமத்தில் போற்றுவர். நான்கு வேதங்களுக்கும் தாயான அவளை "வேத மாதா" என்றும் சிறப்பித்துக் கூறுவர். வேத மாதாவின் தலைப்பகுதி உபநிடதங்களாகும். அவற்றின் நடுப்பகுதி வேத மாதாவின் தலைவகிடாக அமைந்துள்ளது. தேவியின் திருவடித்தூசிகள் தலைவகிட்டில் சிந்தூரமாகப் படிந்துள்ளன. வேதமும் தேவியின் தத்துவத்தை, "இவ்வண்ணம், இத்தன்மையது" என்று நன்கு விளக்கிக் கூறத் தயங்குகிறது. அம்பாளுடைய சரணங்களை உபநிடதங்கள் சிரோபூஷணமாக அணிந்துள்ளன. உபநிடதங்கள் தேவியின் பாதாரவிந்தங்களைப் பரம தாத்பர்யத்துடன் போற்றுகின்றன. வேதங்களாலும், பரமசிவனாலும், மற்றையக் கடவுளர்களாலும் அவளுடைய சரணங்கள் தரிக்கப்படுகின்றன. எனவே வேதங்களாகிற பெண்கள் அம்பாளுடைய சரணங்களையே தங்கள் சிரஸில் புஷ்பங்களாக அலங்கரித்துள்ளனர். தேவியின் பாதகமலங்களில் வேதங்களாகிய பெண்கள் வீழ்ந்து வணங்கும்போது, அந்த சரண கமலங்களின் மகரந்தம் போன்ற சிவந்த தூளியானது அவர்களின் வகிட்டில் படிந்து அங்குத் தரிக்கப்படுகின்ற சிந்தூரமாக ஆகிறதாம். "ச்ருதி-ஸீமந்த - ஸிந்தூரி-க்ருத - பாதாப்ஜ-தூளிகா" என்ற திருநாமத்தினால் லலிதா ஸஹஸ்ரநாமம் இந்த அரிய கருத்தைப் போற்றிக்கூறும். மிகவும் புனிதமான தேவியின் அத்தகைய சரணங்களைத் தன்னுடைய சிரஸில் வைக்கும்படி தயவுடன் பிரார்த்திக்கிறார்,

"ச்ருதீநாம் மூர்தாநோ தவ பௌ
சேகரதயா
மமாப்யேதௌ மாத: சிரஸி தயயா
தேஹி சரணௌ"

என்னும் ஸௌந்தர்யலஹரி சுலோகத்தில் ஆதிசங்கரர்.

காஞ்சீபுரியில் விளையாடுவதில் மிகவும் பிரியமுள்ளவளாயும், எல்லா வேதங்களாயும், யந்த்ர, தந்த்ர, மந்த்ரங்களாயும் விளங்குபவள் காமாட்சி என்பதை,

"அதிகாஞ்சி கேளி லோலே:
அகிலாகம யந்த்ர தந்த்ர மந்த்ர
மயை:"

என்னும் ஆர்யா சதக சுலோகத்திலும்,

வேதங்களின் ரூபமாயும், நாத ஸ்வரூபிணியாயும், பிந்துஸ்வரூபிணியாயும், மோட்சத்தில் உதிக்கும் சந்த்ர ரூபிணியாயும், மந்த்ர, தந்த்ர, ப்ரக்ருதி ரூபிணியாயும், உலகிலுள்ள எல்லாவற்றையும் தன்னுடைய பரிணாமங்களாயுடையவளாகவும் காமாட்சி காட்சியளிக்கிறாள் என்பதை,

"வேதமயீம், நாதமயீம், பிந்துமயீம்
பர பதோத்யத் இந்துமயீம்
மந்த்ரமயீம், தந்த்ரமயீம், ப்ரக்ருதி
மயீம் நௌமி விச்வவிக்ருதி மயீம்||".

என்னும் மற்றொரு ஆர்யா சதக சுலோகத்திலும் மூக கவி கூறுவார்.

இறைவனுடைய முகத்திலிருந்து உண்டான ஆகமங்கள், தந்திர நூல்கள் முதலானவை வேதங்களுக்கு ஒப்பான சிறப்புள்ளவை. வேதங்களைப் போல மதிக்கவும்படுகின்றன. தேவியை வர்ணிக்க முயன்று இயலாமல் போகவே ஆகமங்கள் அனைத்தும் முத்துச்சிப்பியாலான சம்புடமாகி தன்னுள் தேவியை முத்துப்போன்று மூடிவைத்துள்ளனவாம்; ஆகமக் கூட்டமாகிற முத்துச் சிப்பி சம்புடத்தில் விலை மதிக்க முடியாத முத்தாக தேவி விளங்குவதால் அவள் மதிப்பை ஒருவராலும் அளவிட முடியாது. இத்தகைய பெருமை பொருந்திய அம்பிகை, "ஸகல-ஆகம-சுக்தி-சம்புட-மௌக்திகா" என்ற லலிதா ஸஹஸ்ரநாம திருநாமத்தால் போற்றப்படுகிறாள். வாணீ லக்ஷ்மீ உமா ஸ்வரூபிணியாய், நித்ய கல்யாணியாய் கற்பகக் கொடியாய், கைலாசநாதருக்குப் பிரியையாய், வேதாந்தப் பொருளாய், ஞானிகள் மகிழும் மணியாய் ஸ்ரீ சக்கரமாகிற ரத்னபீட நிலயத்தில் தேவி எழுந்தருளியிருக்கிறாள். அவளை நமக்கு வேதங்கள் அறிமுகப் படுத்துகின்றன. வேதங்கள் தன்னை அறிவிக்கும் நூல்களாக வேதங்களை முதலில் படைத்தாள். அழியாத் தன்மை படைத்த வேத அட்சரங்கள் தேவியின் ஸ்வரூபத்தைக் காட்ட வல்லவை. ஸ்ரீநகரத்தின் நான்கு வாயில்களாக அமைந்த நான்கு வேதங்களும் தேவியின் இருப்பிடத்தை அடைய உதவுகின்றன. வேதங்களால் அறியத்தக்க வேத மாதாவாகிய தேவியை, "வேத-வேத்யா" என்று வாக் தேவதைகள் போற்றுவர்.

உபநிடதங்களை வேதாந்தங்கள் எனக் கூறுவர். வாக்கிற்கும் மனத்திற்கும் எட்டாத தேவீ தத்துவத்தின் உயர்வை எல்லா உபநிடதங்களும் ஒரு முகமாகக் காட்டுவதை, "ஸர்வ-வேதாந்த-ஸம்வேத்யா" என்ற திருநாமம் புகழ்ந்து கூறும்.

தேவ, பித்ரு, பிர்ம்ம, மனுஷ்ய, பூத என்னும் ஐந்து வகையான யக்ஞங்களின் வடிவினளாக விளங்கும்

அபிராமிதாஸன் கே. நாராயணசுவாமி,
மயிலாடுதுறை.

முதல பல வகையான வேள்விகளில் விருப்பமுள்ளவளாக இருக்கிறாள். யாகங்களை நிறைவேற்றும் யாக முறை அறிந்த பல வேதியர்களின் வடிவத்தில் இருந்து யாகங்களைச் செய்பவளும், யாகத்தை நடத்த எண்ணங்கொண்டு அதற்காகச் செலவிட்டுத் தக்கவர்கள் மூலம் வேள்வியை நடத்திக் கொள்ளும் யஜமானனுடைய வடிவத்திலும் தேவி விளங்குகிறாள். இவ்வுயரியகருத்துக்களை, "யக்ஞரூபா, யக்ஞப்ரியா, யக்ஞகர்த்ரீ, யஜமான ஸ்வரூபிணி" என்னும் திருநாமங்கள் கூறும்.

ஆன்ம கோடிகளுக்கு உற்ற துணையாகவும், அவர்கள் வழிபட வேண்டிய ஒரே தெய்வமாகவும், சகல உயிர்களையும் ஈன்ற தாயாகவும் தேவி விளங்குகிறாள். வேதங்களின் சாகைகளாயும், தளிர்களாயும், வேராகவும் இருக்கும் அவள் தன் திருக்கரங்களில் மலர்ப் பாணங்களையும், கரும்பு வில்லையும், பாசாங்குசமும் ஏந்திய திரிபுரசுந்தரி என்பதை,

"துணையும் தொழுந் தெய்வமும்
பெற்ற தாயும் சுருதிகளின்
பணையும் கொழுந்தும் பதிகொண்ட
வேரும் பனி மலர்ப்பூங்
கணையும் கருப்புச் சிலையும் மென்
பாசாங்குசமும் கையில்
அணையும் திருபுரசுந்தரி ஆவது
அறிந்தனமே"

என்னும் அபிராமி அந்தாதிப் பாடல் புகழ்ந்து கூறும் தேவி வேதங்களாலும், உபநிடதங்களாலும் புகழ்ந்து பாராட்டப்படுகிறாள். வேள்விகளில் ஹவிர்ப்பாகம் பெற வரும் தேவதைகளின் பெருமைகளைக் கானமாகப் பாடும் வகையில், மந்திர-ஸ்வர அமைப்புகளுடன் கூடியது ஸாம வேதம். வேள்வி வடிவில் இருப்பவளும், வேள்விகளில் ஈடுபாடு கொண்டவளுமான தேவி, அங்குப் பாடப்பெறும் ஸாம கானத்தில் மிகவும் விருப்பமுள்ளவள் என்பதை, "ஸாம கானப்ரியா" என்னும் திருநாமம் போற்றும். தேவியின் மகத்துவத்தை அறிய உதவுபவை வேதங்களாகும். அவள் வேதத்தால் புகழப்படும் வைபவத்தை உடையவளாவாள். ருக், யஜுர், ஸாமம் என்னும் மூன்று வேதங்களின் வடிவினளாக விளங்குபவள் அம்பிகை. ருக்வேதம், "அக்னி மீடே" என "அ" என்னும் அட்சரத்திலும்; யஜுர் வேதம், "இஷேத்வா" என "இ" என்னும் அட்சரத்திலும்; ஸாமவேதம், "அக்ன ஆயாஹி" என "அ" என்னும் அட்சரத்திலும் தொடங்குகிறது. அந்த முதல் மூன்று அட்சரங்களையும் சேர்க்க (அ + இ= ஏ; அ+ஏ=ஐ) "ஐ" என்னும் வாக்பவ பீஜமாகிறது. அந்த பீஜாட்சர வடிவினளான தேவியை, "ஸான கான-ப்ரியா, "ச்ருதி-ஸ்மஸ்துதா-வைபவா", "த்ரயீ" என்னும் புண்ணியத் திருநாமங்களால் வாக் தேவதைகள் போற்றுகின்றனர்.

தேவியை வேதம் விதித்த நெறியில் வழிபடும் மன உறுதி அவளுடைய உபாஸகர்களுக்கு உண்டு என்பதை, "வேதஞ் சொன்ன வழிக்கே வழிபட நெஞ்சுண்டு எமக்கு" என்னும் வரியில் அபிராமபட்டர் குறிப்பிடுவது இங்கு நினைவு கூறத்தக்கது. மீனாட்சியின் அருளினால் குமரகுருபர சுவாமிகள் பாடியுள்ள மீனாட்சி அம்மைப் பிள்ளைத் தமிழ் வருகைப்பருவத்தில் மீனாட்சியை அவர், "பழமறையின் குருத்தே வருக" எனப் புகழ்ந்துரைப்பார். எங்கும் வியாபித்திருப்பது ஆகமம் என்னும்வேதம். வேதங்களின் அங்கங்களான ஸ்ம்ருதிகள், புராணங்கள், இதிஹாஸங்கள் முதலியவற்றால் துதிக்கப்படும் பரதேவதையின்மஹிமையைஅளவிட்டுக் கூற முடியாது. எல்லா வேதங்களின் முடிவானவை வேதாந்தங்கள் எனப்படும். அவற்றின் தாத்பர்யம், "தத்துவமஸி, பிரக்ஞானம் பிரஹ்ம, அயமாத்மா பிரஹ்ம, அஹம் பிரஹ்மாஸ்மி" என்னும் மஹாவாக்யார்த்த அத்வைதமேயாகும். இத்தகைய மஹாதாத்பர்யத்திற்கு விளைநிலமாய் அதாவது பொருளாய் விளங்கும் பிர்ம்மஸ்வரூபிணியான தேவியை, "ஸகலாகம ஸம்ஸ்துதா, ஸர்வ வேதாந்த தாத்பர்ய பூம்யை" என்னும் மந்திரச் சொற்களால் லலிதாத்ரிசதி போற்றிக் கூறும்.

வேதமாதாவாக விளங்கும் தேவியின் மஹிமையை வேதங்களும், உபநிடதங்களும், ஆகமங்களும், புராணங்களும், இதிஹாஸங்களும், பிற நூல்களும் பலவாறு போற்றிக் கூறினாலும் அவளுடைய பெருமையை அளவிட்டுக் கூற இயலாது. தன்னைச் சித்த சுத்தியுடன் வேததின் விதிக்கப்பட்ட முறைப்படி புகழ்ந்து வழிபடும் அடியவர்களான தேவி உபாஸகர்களைத் தொழுது வணங்கும் தொண்டர்களுக்குக்கூட தேவி துந்துபி முழங்க ஐராவதத்தில் ஏறிவரும் இந்திர பதவி கிட்டும்படி அருளுகிறாள் என்பதை, "புகழ்ந்து மறை சொல்லிய வண்ணம் தொழுமடியாரைத் தொழுமவர்க்கு, பல்லியம் ஆர்த்தெழவெண்பகடூரும் பதம் தருமே" என்னும் அபிராமி அந்தாதிப் பாடலின் வரிகளில் காணலாம். வேத ஜநநியான தேவியை, வேத நெறியில் போற்றும் அவளுடைய உபாஸகர்களைத்தொழுது வழிபடும் தொண்டர்களுக்கே இவ்வளவு உயர்ந்த நலத்தை அவள் அருளினால் தேவி தன்னுடைய உண்மையான பக்தர்களுக்கு எல்லா நலன்களையும் அருளுவாள் என்பதில் சிறிதும் ஐயமில்லை. சொல்லும் பொருளும் ஒன்றி நிற்பதுபோல தன் கணவருடன் இணைந்திருக்கும் பரிமளப் பூங்கொடியான தேவியின் மலரடிகளை அல்லும் பகலும் விடாது வழிபடும் அடியவர்கள் இம்மண்ணில் சொர்க்க போகத்தை அனுபவித்து, அதன்பின் அழியாத முத்தி இன்பத்தையும் பெறுவர்.



# திருவடியும் சரணாகதியும்



**ஜன்மாந்தர ஸஹஸ்ரேஷு தபோ**
**ஞ்ஞான ஸமாதிபி: |**
**நராணாம் க்ஷீண பாபனும் கிருஷ்ணே**
**பக்தி ப்ரஜாயதே ||**

பல்லாயிரக்கணக்கான ஜன்மங்களில் கர்ம, ஞான யோகங்களை அனுஷ்டித்து பாபம் நீங்கப் பெற்றவர்களுக்கு ஸ்ரீகிருஷ்ண பகவானிடத்தில் பக்தியானது உண்டாகிறது.

சிறிது கால இடைவெளியின்றிக் கூட (தொடர்ந்த தைல தாரை போல்)எப்பொழுதும் எம்பெருமான் சிந்தனையாகவே இருக்கும் நிலையை அடைய எவ்வளவோ ஜன்மங்கள் அடைய வேண்டியிருக்கிறது. இது மிகவும் கடினமான நிலை. ஆகவே கலியுகத்தில் நம்போன்றவர்களுக்குக் கைகண்ட மருந்து சரணாகதியே. இறைவன் திருப்பாதங்களில் சரணம் புகுவதற்கு எந்தவிதமான யோக்யதையையும் தேடவேண்டாம். எம்பெருமானை ஸ்ரீமந் நாராயணனுடைய இன்னருள்தான் சாதி சமயம் காலம் முதலிய வரம்புகளையெல்லாம் கடந்து நாம் செய்த தோஷங்களையே காரணமாகக் கொண்டு பலனளிக்கும். சரணாகதிக்கு அடைக்கலம், பிரபத்தி என்ற பெயர்களுமுண்டு. எம்பெருமான் ஒருவனைத் தவிர மற்றொருவரால் சாதிக்கமுடியாததாயும் தனக்கு மஹாவிச்வாஸத்தோடு கூட பகவான் ஒருவனையே உபாயமாயிருக்கும்படி (அடையப்படுபவனையும் அடையும் மார்க்கமுமாயிருப்பனையும் தன்மை) பிரார்த்திப்பதே சரணாகதி.

சரணாகதியை திருவடிகளில் செய்வது திருவடிகளையுடைய எம்பெருமானையே சேரும். ஆயினும் அடியார்கள் எல்லாம் திருவடிகளில் சரணாகதி செய்தே பலன் பெற்றார்கள்.

ஸ்ரீபிள்ளை உலகாசிரியர் முமுக்ஷுப்படியில் த்வய ப்ரகரணத்தில் (146) 'பிராட்டியும், அவனும் விடிலும் திருவடிகள் விடாது; திண் கழலாயிருக்கும்,' என்றும் (147) 'சேஷி பக்கல், சேஷபூதன் இழியுந் துறை; ப்ரஜை முலையிலே வாய் வைக்குமா போலே' என்றும் அருளிச் செய்துள்ளார்.

மாதாவின் சர்வ அவயவங்கள் இருக்கச்செய்தேயும் ஸ்தநந்த்ய ப்ரஜை (பால் குடிக்கும் குழந்தை) முலையிலே வாய் வைக்குமா போலே சேஷபூதன் = எம்பெருமானுக்கு அடிமைப்பட்டவர்கள் அடியார்கள், இழியும் துறை = நாடுவது, சேஷிபக்கல் = எம்பெருமான் திருவடிகளையே.

ஸ்ரீ வேதாந்த தேசிகரும் அடைக்கலப்பத்தில் பிரபத்தி எல்லாப் பலனையும் தரவல்லது என்பதைக் கீழ்க்கண்ட பாசுரத்தினால் அருளிச் செய்கிறார்.

**திரு. எஸ். திருமலை இராமஸ்வாமி**
*திருப்புல்லாணி.*

"காகம், இராக்கதன், மன்னர் காதலி
கத்திர பந்து
நாகம், அரன், அயன் முதலா
நாக நகரார் தமக்கும்
போக முயர் வீடு பெறப் பொன்னருள்
செய்தமை கண்டு
நாகமலை நாயகனார் நல்லடிப்
போதடைந்தேனே"

ஹஸ்திகிரி நாதரான (நாகமலை நாயகனார்) பேரருளாளன், காகம் =

காகமாக வந்த இந்திரன் குமாரன், இராக்கதன் = விபீஷணனென்னும் ராக்ஷஸன், மன்னர் காதலி = பஞ்ச பாண்டவ அரசர்களின் மனைவியான திரௌபதி, கத்திரபந்து = க்ஷத்திர பந்து என்னும் அரசன், நாகம் = காளியனென்னும் ஸர்ப்பம், அரன், அயன் முதலா = சிவன், பிரம்மா முதலிய, நாக நகரார் தமக்கும் = தேவலோக வாசிகளாகிய அனைவருக்கும், போகம் = ஸம்ஸார போகத்தையும், உயர் வீடு = உயர்ந்த மோக்ஷத்தையும், பெற = பெறும்படி, பொன் அருள் செய்தமை கண்டு = சிறந்த அருளைப் புரிந்ததை அறிந்து, நல் அடிப்போது = அவருடைய சிறந்த திருவடிமலரை, அடைந்தேன் = சரணமடைந்தேன் என்கிறார்.

எம்பெருமான் திருவடிகளையே ஆழ்வார்களும் மங்களாசாஸனம் பண்ணினார்கள் என்பதையும் கீழ்க் கண்ட அவர்கள் பாசுரங்கள் மூலம் உணரலாம்.

" மல்லாண்ட திண்டோள் மணிவண்ணா
உன் சேவடி செவ்வி திருக்காப்பு "

(திருக்காப்பு = மங்களம் பாடி ரக்ஷயிடுதல்)

— (ஸ்ரீ பெரியாழ்வார் — திருப்பல்லாண்டு)

சிற்றஞ்சிறு காலே வந்து உன்னைச் சேவித்து உன்
பொற்றாமரை அடியே போற்றும் பொருள் கேளாய்

—(ஸ்ரீ ஆண்டாள் - திருப்பாவை)

அம்மான் தன் அடி இணைக்கீழ் அலர்களிட்டு
அங்கு அடியவரோடு என்று கொலோ அணுகு நாளே

— (ஸ்ரீ குலசேகராழ்வார் — பெருமாள் திருமொழி)

புண்டரீக பாத புண்ய கீர்த்தி நுஞ்செவிமடுத்
துண்டு, நும் முறுவினைத் துயருள் நீங்கியுய்ம்மினோ

—(ஸ்ரீ திருமழிசையாழ்வார் — திருச்சந்தவிருத்தம்)

கற்றினம் மேய்த்த எந்தை கழலிணை பணிமினீரே

— (ஸ்ரீ தொண்டரடிப் பொடியாழ்வார் - திருமாலை)

அரங்கத்தம்மான் திருக்கமல பாதம் வந்து என்
கண்ணினுள்ளன வொக்கின்றதே

— (ஸ்ரீ திருப்பாணாழ்வார் — அமலனாதிப்பிரான்)

தொண்டெல்லாம் பரவி நின்னை தொழுது அடி
பணியுமாறு கண்டு

—(ஸ்ரீ திருமங்கையாழ்வார் - திருக்குறுந்தாண்டகம்)

செய்ய சுடராழியானடிக்கே சூட்டினேன் சொல்மாலை
இடராழி நீங்குகவே என்று

—(ஸ்ரீ பொய்கையாழ்வார் — முதல் திருவந்தாதி)

பின்னாலரு நரகம் சேராமல் பேதுறுவீர்
முன்னால் வணங்க முயல்மினோ - பன்னூல்
அளந்தானைக் கார்க்கடல் சூழ் ஞாலத்தை எல்லாம்
அளந்தானவன் சேவடி

—(ஸ்ரீ பூதத்தாழ்வார் - இரண்டாந்திருவந்தாதி)

பொன்னங்கழலே தொழுமின் முழு வினைகள்
முன்னங் கழலும் முடிந்து

—(ஸ்ரீ பேயாழ்வார் - மூன்றாந்திருவந்தாதி)

திருவடியை நாரணனைக் கேசவனைப் பரஞ்சுடரை
திருவடிசேர் வதுகருதிச் செழுங்குருகூர்ச் சடகோபன்
திருவடி மேலுரைத்த தமிழ் ஆயிரத்துளிப்பத்தும்
திருவடியே அடைவிக்கும் திருவடி சேர்ந்தொன்றுமினே

—(ஸ்ரீ நம்மாழ்வார் - திருவாய்மொழி)

★







ஸ்ரீ நடராஜர் கோயில், சிதம்பரம்.

—திரு. வி. முத்துராமன், கோவை.

# நம்மை உய்விக்க வந்த நம்மாழ்வார்

மாறன், சடகோபன், பராங்குசன், குருகையோர்கோன், வகுளாபரணன் என்றெல்லாம் போற்றப்படும் நம்மாழ்வாரின் திருநக்ஷத்திர திவ்ய தினம் ஒவ்வொரு வருடமும் நாடெங்கும் கொண்டாடப்படுகிறது. ஜனங்களை நல்வழிப்படுத்த ஸ்ரீவிஷ்வக்ஸேநரின் அம்சமாக நம்மாழ்வாரை பூவுலகத்திற்கு அனுப்பினார் ஸ்ரீமந்நாராயணன்.

தம் தாயின் கர்ப்பத்திலிருந்த பொழுதே 'சடம்' என்னும் ஒரு வகை கர்ப்ப வாயுவை அகற்றிவிட்டு ஞானியாகவே பிறந்தமையால் இவருக்கு 'சடகோபர்' என்றும் 'சடாரி' என்றும் திருநாமங்கள் ஏற்பட்டன.

சாதாரண குழந்தைகளுக்கு இருக்கக் கூடிய குணங்களான தாய்ப்பால் குடித்தல், அழுகை முதலியவை இவரிடம் இல்லை. "உறங்காப்புளி" என்னும் புளிய மரத்தின் பொந்தில் அமர்ந்து மஹாதேஜஸ்வியாய் விளங்கினார்.

தனக்குத் தகுந்த ஒரு ஆச்சார்யனைத் தேடி வடக்கே சென்று கொண்டிருந்த மதுரகவியாழ்வார்க்கு ஆகாயத்தில் தெற்குத் திசையில் ஓர் ஒளி தோன்றியது. அந்த ஒளி தெற்குத் திசையை நோக்கி நகர ஆரம்பித்தது. மதுரகவியாழ்வாரும் அந்த ஒளியைப் பின்பற்றினார். அந்த ஒளி மதுரகவியாழ்வாரை ஆழ்வார் திருநகரில் உறங்காபுளி என்னும் புளிய மரத்தின் பொந்தில் அமர்ந்துள்ள சடகோபனிடம் அழைத்துச் சென்று மறைந்துவிட்டது.

அந்த தேஜஸ்வியின் முகாரவிந்தத்தைப் பார்த்து மதுரகவியாழ்வார் ,'சிறியதன் வயிற்றில் பெரியது பிறந்தால் எத்தைத் தின்று எங்கே கிடக்கும்?" என்று வினவினார். சடகோபனும், "அத்தைத் தின்று அங்கே கிடக்கும்" என்று ஸூக்ஷ்மமாகவே பதிலளித்தார். பகவானுடைய கல்யாண குணங்களை அமுதமாகக் கொண்டு அவனிடமே கூடிவிட வேண்டும் என்னும் உயர்ந்த தத்துவத்தைக் கேட்ட மதுரகவியாழ்வார், இவரே நமக்கு நல்வழி காட்டும் ஆச்சாரியார் என்று நினைத்தார்.

நம்மாழ்வாரின் பெருமைகளை உரைக்க மதுரகவியாழ்வார் "கண்ணிநுண் சிறுத்தாம்பு" என்ற திவ்ய ப்ரபந்தத்தை இயற்றினார். இப்போதும் பெரியோர்கள் திருவாய்மொழி ஸேவை தொடங்கும் பொழுதும் திருவாய்மொழி சாற்றுமுறையின்போதும் "கண்ணிநுண் சிறுத்தாம்பு" ஸேவிப்பதைக் காணலாம்.

இந்த "கண்ணிநுண் சிறுத்தாம்பு" பாசுரத்தை குறைந்தபக்ஷம் 8000 தடவை அனுஸந்தித்தால் நம்மாழ்வார் நமக்குஸேவை தந்து சகல பாக்யங்களையும் அளிப்பார். நாதமுனிகள் என்னும் ஆச்சாரியார் இப்பாசுரத்தை பன்னீராயிரம் தடவை ஜபம் செய்து ஆழ்வாரின் திருவருளால் நாலாயிர திவ்யப்ரபந்தத்தை ஸாக்ஷாத்கரித்தார்.

ஸ்ரீ வைஷ்ணவ ஸம்ப்ரதாயத்திற்கு முதன் முதலாகத் தோன்றியவர் நம்மாழ்வாரே. "நம்" என்ற சொல்லை திருநாமத்தோடு சேர்த்துக் கூறப்படுபவர்கள் நால்வர். எம்பெருமான்களுள் ஒருவர் நம்பெருமாள் (ஸ்ரீரங்கநாதர்). ஆழ்வார்களுள் ஒருவர் நம்மாழ்வார். ஆச்சார்யகளுள் இருவர் நஞ்சீயர், நம்பிள்ளை.

திரு. சி. ஆர். திருவேங்கடத்தான்,
பி.எஸ்ஸி. பி.காம்.
டால்மியாபுரம்

நம்மாழ்வார் திருவாக்கிலிருந்து ருக்வேதம், யஜுர்வேதம், அதர்வண வேதம், ஸாமவேதம் முதலிய சம்ஸ்க்ருத வேதங்கள் தமிழில் திருவிருத்தம், திருவாசிரியம், பெரிய திருவந்தாதி, திருவாய்மொழி என்ற நான்கு பிரபந்தங்களாக வந்தன.

இப்பிரபந்தங்களில் நம்மாழ்வார் திருமாலின் திவ்ய சொரூபத்தையும் திருவருளையும் உணர்ந்து நம்மை உய்விக்க இப்பிரபந்தங்களை நமக்கு அருளியுள்ளார். இவற்றைத் தினமும் பாராயணம் செய்து நம்மாழ்வாருடைய திருவருளுக்குப் பாத்திரமாவோமாக.

ஸர்வே ஜநோஸ் ஸுகிநோ பவந்து!

நம்மாழ்வார் திருவடிகளே சரணம்!

*

## சீதா கல்யாணம்

ஜனகரின் திருமாளிகையில் நடந்த கல்யாணத்தின்போது ஒரே சமயத்தில் 4 கல்யாணங்கள் நடந்தன. வளர்ப்பு மகளான ஜானகியை தசரத சக்ரவர்த்தியின் மூத்த குமாரனை ஸ்ரீராமனுக்கும், ஜனகர் தான் பெற்றெடுத்தப் பெண்களான ஊர்மிளையை லக்ஷ்மணனுக்கும், மாண்டவியை பரதனுக்கும், ச்ருதகீர்த்தியை சத்ருக்னனுக்கும் முறையே விவாகத்தைக் கோலாகலமாக நடத்திவைத்தார்.

—தகவல்: அடியார்க்கடியவன்-கேதாண்டபட்டி.

# யாதகிரி

"நமஸ்தே நரஸிம்ஹாய நமஸ்தே
கருடத்வஜ |
யஜ்நநேத்ர நமஸ்தேஸ்து காலத்வஜ
ஜயத்வஜ ‖ "

என்கிறபடி ஸ்ரீமந் நாராயணன், இப்பாரத தேசத்தில், பல திவ்ய தேசங்களில் நரஸிம்மரூபமாக சேவை சாதித்து அருளுகிறார். இஃதில் ஆந்திர மாநிலத்தில் முக்கியமாக நான்கு க்ஷேத்திரங்கள் மிகவும் புகழ்வாய்ந்தன. அதாவது அகோபிலம், மங்களகிரி, ஸிம்ஹாசலம், யாதகிரி முதலியனவாகும்.

யாதகிரி (யாதகிரிகுட்டா) எனப் போற்றப்படும் எம்பெருமானின் குண விசேஷங்களை இங்குக் காண்போம்.

"ஸ்ரீமந் பயோநிதி நிகேதந சக்ரபாணே
போகீந்தர போக மணிரஞ்ஜித
புண்யமூர்த்தே
யோகீச சாச்வத சரண்ய பவாதிபோத
லக்ஷ்மிந்ருஸிம்ஹ மமதேஹி
கராவலம்பம் ‖ "

என்று ப்ரத்யக்ஷ அவதாரத்தின் சேவையைப் பெற்று, அதன் பலனைக் கண்கூடாகப் பெற்ற ஸ்ரீமத் ஆதிசங்கராச்சாரியார் உலக மக்களும் அவனின் பரிபூர்ண அருளைப் பெற்று உஜ்ஜீவிக்க வேண்டி இவ்வாறு அருளினார்.

க்ருதயுகத்தில் மஹாவிஷ்ணு ப்ரஹ்லாதனின் பக்திக்கு கட்டுப்பட்டு, ஹிரண்யனை ஸம்ஹாரம் செய்ய நரசிம்மரூபமாக அவதாரம் எடுத்தார். ஆயின் ப்ரம்மாவும், தேவர்களும், இந்த அபூர்வமான அவதாரத்தை சேவித்து, இந்த அபூர்வமான அவதாரத்துடன் உலக மக்களுக்கும் சேவை சாதிக்கவேணும் என ப்ரார்த்தனை செய்ததின் பேரில், பகவான் லக்ஷ்மிதேவியுடன் இங்கு இருக்கும் மலைமேல் உள்ள குகையில் எழுந்தருளி சேவை சாதித்து வருவதாக புராண மூலமாக அறிகிறோம்.

மேலும் த்ரேதாயுகத்தில் விபுணடு மஹரிஷியின் பேரனை "யாதுடு" என்கிற ரிஷி, ஸ்ரீ நரசிம்மரை ப்ரத்யக்ஷமாக சேவை சாதித்தருள, ஸ்ரீ ஆஞ்ஜனேயரின் உபதேசம் பெற்று

திரு. எஸ். லக்ஷ்மி நரசிம்மன்,
விஜயவாடா.

தவம் இருந்தார். அவரது தவத்துக்கு பகவான் மிகவும் சந்தோஷமடைந்து அவருக்கு ஜ்வாலா நரசிம்மராகவும், யோக நரசிம்மராகவும், உக்ர நரசிம்மராகவும், கண்ட பேரண்ட நரசிம்மராகவும், லக்ஷ்மி நரசிம்மராகவும் அதாவது பஞ்ச நரசிம்ம அவதாரமாக காட்சி அளித்தார். தான் பெற்ற இந்த இன்பம் இவ்வையகம் பெற்று இன்புற வேண்டும் என ப்ரார்த்தித்ததில், இவர் வேண்டுகோளுக்கு இணங்கி மேற்படி மலைமேல் உள்ள குகையில் பஞ்சநாரசிம்ம அவதாரமாக (சுயம்புவாக) இன்றும் பக்தர்களுக்கு சேவை சாதித்து வருகிறார் என்பது கண்கூடான உண்மையாகும். ஆகையால் இப்புனித மலைக்கு "யாதகிரி" எனப் பெயர் வந்தது எனவும் அறிகிறோம்.

இப்புண்ய க்ஷேத்திரம் ஹைதராபாத்துக்கு 35 கிலோ மீட்டர் தொலைவில் சிறந்த அழகான மலைமேல் உள்ளது. ரயில் வசதி, பஸ் வசதிகள் உள்ளன. மலைக்குச் செல்ல பஸ் வசதியும் உள்ளது.

''விஷ்ணு புஷ்கரணி தீர்த்தம் பவித்ரம்
லோக விச்ருதம்
ஸ்நான தானுதிகம் தத்ரா ஸர்வ
பாப நிவாரணம் ''

என இங்கு உள்ள புஷ்கரணியின் மகிமையைச் சொல்கிருர்கள்.

இங்கு நரசிம்ம ஜயந்தி மிகவும் விமரிசையாகக் கொண்டாடப்படுவதாக அறிகிறோம். கல்யாண உத்ஸவம், ப்ரார்த்தனே உத்ஸவங்கள் நடந்து வருகின்றன. மேலும் ப்ரம்மோத்ஸவமும் நடந்து வருகிறது.

இங்கு பாஞ்சராத்ர ஆகமனப்படி பூஜைகள் நடந்து வருகின்றன. நாலாயிர திவ்யப் பிரபந்தங்களின் சேவை, சாத்துமுறைகள நன் முறையில் வழக்கில் இருப்பது போற்றத்தக்கதாகும்.

காகதீய ராஜாக்கள், பல கைங்கர்யங்கள் செய்து உள்ளதாக வரலாறு கூறுகிறது.

இங்குத் தனியாக தாயார் சன்னதி ஏதும் கிடையாது.



ஸ்ரீ சனீஸ்வரர் கோயில்-திருநள்ளாறு, மேஜர்தாசன்-ஈரோடு.



ஸ்ரீ அகஸ்தீஸ்வரர் ஸ்வாமி-தொண்டவாடா (ஆ.பி.)-பி. வெங்கட்-திருப்பதி.

இங்கு ஏள்ளி இருக்கும் உத்ஸவர் நின்ற திருக்கோலத்தில் சங்கு, சக்கரம், அபய ஹஸ்தம், வரத ஹஸ்தம் ஆகிய நான்கு திருக்கரங்களுடனும், சிம்ம முகத்துடனும் ஸ்ரீ லக்ஷ்மி சமேதராய் எழுந்தருளி பக்தர்களுக்கு சேவை சாதிக்கிருர்.

இந்த க்ஷேத்திரம் ப்ரார்த்தனே ஸ்தலமாகவும், மிக வரபிரசாத ஸ்தலமாகவும் திகழ்வதால், பல இடங்களில் இருந்து அனுதினம் பக்தர்கள் வந்து சேவித்து அவனது அருள் பெறுகிருர்கள்.

இவ்வாறு சிறப்புடைய புண்ய க்ஷேத்திரத்தை பக்தகோடிகளும் சென்று சேவித்து அவனது பரிபூர்ண அருளேப் பெற வேண்டுகிறேன்.

''லக்ஷ்மி நருஸிம்ஹ தேவேச ரக்ஷ
ரக்ஷ நிருகேஸரி
ப்ரஹலாத மிவ மாம் ரக்ஷ
ராக்ஷஸே நாதி பீடிதம் ''

என யாதகிரி ஸ்ரீ நிவாஸனேப் போற்றிப் புகழ்வோமாக. ★

# ஸ்ரீமத்வர் அருளிய மங்களதீபம்

பூவுலகில் பகவான் ஸ்ரீ நாராயணன் அவதாரம் கொள்ளும்போதெல்லாம் வாயு பகவான், இந்திரன், வருணன் முதலான தேவர்களும் பகவானைத் தொடர்ந்து வந்து அவனுடைய துஷ்ட நிக்ரஹ சிஷ்ட பரிபாலன பணிகளுக்கு உறுதுணையாகிறார்கள். ஸ்ரீராமாவதார காலத்தில் ஹனுமானாகவும், ஸ்ரீ கிருஷ்ணாவதார காலத்தில் பீமனாகவும் வாயு பகவான் தொடர்ந்து வந்தார். கலியுகம் பிறந்ததும் வேத நூல்களின் உட்கருத்துக்களை அறியும் ஆற்றலும் ஆர்வமும் அந்தணர்களிடையே குறைந்தன. தரும நெறிகளை அலட்சியப்படுத்தும் போக்கு எங்கும் மிகுந்தன. எனவே வேத நெறிகள் தழைத்திடவும் சனாதன தருமம் புத்துயிர் கொள்ளவும் திருவுள்ளம் கொண்டு ஸ்ரீ நாராயணன் இங்கு ஸ்ரீவேத வியாசராக அவதரித்தார். பகவானின் பதினேழாவது அவதாரம் இது. கடலென விரிந்து இருந்த வேதங்களை நான்கு கூறுகளாகப் பிரித்தார். அவைகள் ரிக், யஜுர், சாம, அதர்வண வேதங்களாயின. இதன் காரணமாகவே அவர் வேத வியாசர் ஆனார். தம்முடைய அவதாரப் பணிக்கு இசைய பல நூல்களை எழுதியருளினார்.

ஸ்ரீ வேத வியாசரைத் தொடர்ந்து ஸ்ரீ வாயு பகவான் ஸ்ரீமத்வாச்சாரியராக உடுப்பிக்கு அருகில் பாஜக க்ஷேத்திரத்தில் அவதரித்தார். ஸ்ரீ நாராயணனுக்கும் வாயு பகவானுக்கு இடையில் உள்ள உறவு ஈடு அற்றது. இணை அற்றது. பிரிவு என்பதை அது எக்காலத்திலும் கண்டதில்லை!

ஸ்ரீ வேத வியாசரை ஸ்ரீமத்வர் பிரதான குருவாகக் கொண்டார். உடுப்பியிலிருந்து தமது குருவை தரிசனம் செய்ய பலமுறை பதரி க்ஷேத்திரம் சென்றார். அவரது திருவடிகளில் அமர்ந்து இருந்த சீடர்களுடன் தாமும் பங்கு கொண்டு பாடம் கேட்டார். அவர் கட்டளையை ஏற்று பிரம்ம சூத்திரங்களுக்கு உரைகள் செய்தார். வேதங்கள், உபநிஷதங்கள், மஹாபாரதம் முதலிய நூல்களுக்கு உரைகள் வழங்கினார். இவ்வகையில் ஸ்ரீமத்வர் 37 நூல்களை செய்துள்ளார். பகவத் கீதைக்கு உரை எழுதியவுடன் அந்நூலுக்குத் தம் குருவின் ஒப்புதலைப் பெறவேண்டி பதரி க்ஷேத்திரம் புறப்பட்டு அவரது பொற் பாதங்களில் அந்நூலை சமர்பித்துப் பணிந்து நின்றார். அந்நூலில் ஸ்ரீ வேத வியாசரால் திருத்தங்களும் அருளப் பெற்றார். இத்தகைய நெருங்கிய தொடர்பு காரணமாக ஸ்ரீ வேத வியாசரின் உள்ளக்கருத்துக்களை ஸ்ரீமத்வரால் உள்ளபடியே அறிய முடிந்தன. அவைகளை தம்முடைய உரைகளில் தெளிவாகக் கூற முடிந்தன. எனவே இவ்வுரை நூல்கள் ஸ்ரீவேத வியாசரின் குரலாகவே இன்று ஒலிக்கின்றன. ஸ்ரீமத்வர் இன்றும் பத்ரீ க்ஷேத்திரத்தில் தம் குருவிடம் பாடம் கேட்டுக் கொண்டு இருக்கிறார் என்னும் செய்தி ஒரு அதிசயம். ஆனால் உண்மை!

தம்முடைய கருத்துக்களுக்கும் கோட்பாடுகளுக்கும் என்றும் நீடித்து நிலை பெற ஸ்ரீமத்வர் கருதினார். எனவே துவைத மதத்தை நிறுவினார்.

'ஸ்ரீ ஹரி ஒருவனே பெரியவன். அவனே நமது குரு, நமது தந்தை, நமது தாய், நமது லட்சியம். அவனைத் தவிர இவ்வுலகில் எதுவும் இல்லை. எனவே உலக விஷயங்களில் சிந்தனை கொள்ளாதே. அவனையே சிந்தித்திரு. அவனுடைய புகழை சிந்தனை செய்வதின்மூலம் ஒருவன் தன் தீவினைகளை விரைவில் களைந்துவிட முடியும். நற்கதிக்கு இதுவே மார்க்கம். எனவே இனி அசிரத்தை விட்டுவிடு' எனும் போதனைகளை நாடு முழுவதும் பயணம் செய்து பரப்பினார். சிந்தனையே மனிதனை உருவாக்குகிறது. இது இயற்கையின் விதி. ஜடப் பொருளைச் சிந்திப்பவன் ஜடமாகிறான்; தெய்வத்தைச் சிந்திப்பவன் தேவனாகிறான்.

திரு. ஆர். சுப்பாராவ்,
திருக்கோவலூர்

உடுப்பி ஸ்ரீகிருஷ்ணனுக்கு ஆலயம் அமைத்து அதன் நித்திய பூஜைகளுக்காகவும் விசேஷ பூஜைகளுக்காகவும் எட்டு பால சன்னியாசிகளை நியமனம் செய்தார். அவர்கள் பரியாய முறையில் அப்புனிதப் பணிகளை ஏற்று கடந்த 700 ஆண்டுகளாக உடுப்பி ஸ்ரீ கிருஷ்ணனுக்கு ஆராதனைகளை உரிய சிரத்தையுடனும் உற்சாகத்துடனும் (குரு-சிஷ்ய பரம்பரையில்) தொடர்ந்து நடத்திக் கொண்டு வருகிறார்கள். ஸ்ரீமத்வ மதத்தைச் சேர்ந்தவர்கள் தம் வாழ் நாட்களில் ஒரு முறையேனும் உடுப்பி ஸ்ரீ கிருஷ்ணனைக் கண்டு தரிசிப்பதை இதுநாள் வரையிலும் ஒரு புனிதக் கடமையாகக் கொண்டு இருக்கிறார்கள். அந்த ஆலயம், ஸ்ரீமத்வர் ஏற்றி வைத்த ஒரு மங்கள தீபமாய் அமைந்து திக்கெல்லாம் அருள் ஒளி வீசத் திகழ்கின்றது.

தம் அவதாரப் பணிகள் முடிவுற்றதும் ஒரு நாள் சீடர்களுக்கு தாம் மிக விருப்பங்கொண்டிருந்த ஆத்ரேய உபநிஷதம் பாடம் கூறிக் கொண்டிருக்கையில் ஸ்ரீமத்வர் உடுப்பியிலிருந்து மறைந்தார். பத்ரிகாஸ்ரமம் புகுந்தார். ஆண்டுதோறும் ஸ்ரீமத்வ நவமி அன்று அப்புனித நாளை ஸ்ரீமத்வ மதத்தைச் சார்ந்தவர்கள் பக்தியுடனும் பாசத்துடனும் நினைவு கூர்ந்து வருகிறார்கள்.

# ஆபுத்திரன் திறம் அறிவித்த காதை

மணிமேகலை ஐம்பெருங்காப்பியங்களுள் ஒன்று. சிலப்பதிகாரம் மணிமேகலை இரண்டையும் 'இரட்டைக் காப்பியங்கள்' என்பர். அதில் சிலம்பில் பூமாதும் கலைமாதும் போற்றும் அழகும், அறிவும், புகழும் உடைய கோவலன், மழையைநிகர்த்த கொடைத் தன்மை உடைய மாநாய கன் மகள் கண்ணகி, கலைகள் யாவும் கற்றுத் துறை போகிய நங்கையாகிய மாதவி ஆகியவரின் வரலாறு கூறும் நூலாகும். சிலம்பின் தொடர்கதை மணிமேகலை நூல். மாபெரும் தவ நெறியை செலுத்திய மணிமேகலை கோவலனுக்கும் மாதவிக்கும் மகளாய் பிறந்தவள். துறவியாகிய மணிமேகலை ஆபுத்திரன் கை அமுதசுரபி பெற்று 'காணார் கேளார் கால் முடம் பட்டோர் பேணுநர் இல்லோர் பிணியறிவுற்றோரின்' பசிப்பிணி தீர்க்கும் அறவாழ்க்கை வாழ்ந்தனள்.

'தவத்துறை மாக்கள் மிகப்பெருஞ் செல்வர் ஈற்றிளம் பெண்டிர் ஆற்றுப் பாலகர் முதியோர் என்னான் இளையோர் என்னான், கொடுந்தொழிலாளன் கொன்டினன் கொன்றனன் குவிப்ப' என்று, தவ நெறியில் உள்ள துறவிகள், மிகவும் பெருத்த செல்வமுடையோர், சமீபத்தில் குழந்தை ஈன்ற இளம் பெண்கள், எவ்வித மனித அறமும் அறியாத இளஞ் சிறுவர், ஆண்டிலே முதியோர், ஆண்டிலே இளையோர்' என்று ஒன்றையும் கருதாத கூற்றுவன் கொன்று குவிக்கும் காட்சியை இந்நூல் நம்முன் கொண்டு வந்து நிறுத்துகிறது ஒவ்வொருவரும் மண்ணுயிர் மடிவதற்கு முன் 'அன்பு' வழியில் அற வழியில் ஈடுபடுக என்று வலியுறுத்துகிறது இந்நூல்.

மணிமேகலையில் முப்பது காதைகள் உள்ளன. செய்யுளில் கூறப்படும் கதைக்குக் காதை என்று பெயர். அதில் ஆபுத்திரன் வரலாறு ஒரு காதையாகும்.

**இக்கதையைக் காண்போம் :**

காசி மாநகரின்கண் வேத நெறியாளனாகிய அந்தணன் சாலி ஒருவன் இருந்தான். அவன் மனைவி 'சாலி' என்ற பெயருடையாள். அவள் கற்பு நெறி தவறியதால் தண்டனைக்கு அஞ்சி தென்திசை நோக்கி குமரியின் கண் நீராடும் பொருட்டுச் சென்றாள். கருவுற்றிருந்த அவள் நடந்தே தன் வழி நோக்கிச் செல்லலாயினாள். ஒரு நாள் இரவில் வழியில் ஒரு ஊரின் வெளியிடத்தே மரத்தின் அடியில் தங்கினாள். அங்கே ஒரு ஆண் குழந்தையைப் பெற்றெடுத்தாள். 'தானே ஒரு தனியள். தனக்கு ஒரு குழந்தை வேறா?' என்று புனிற்றிளங் குழந்தையை அங்கேயே விட்டு விட்டு குமரி நோக்கி வழி நடக்கலானாள்.

அடுத்த நாள் அங்கு மேயும் பசுக்களில் ஒன்று குழந்தையிடம் வந்து தானாகத் தன் மடியிலிருந்து பால் சொரிந்து அக்குழந்தைக்கு ஊட்டியது. இது போன்று சில நாட்கள் அப்படி அக்குழந்தைக்கு நாள் தோறும் மடி சொரிந்து அக்குழவியைக் காப்பாற்றியது. அவ்வழியே செல்லும் அந்தணர் ஒருவர் அக் குழந்தையை எடுத்துச் சென்று மகப் பேரில்லா மனைவியிடம் அக்குழந்தையை அளித்து காப்பாற்றி 'இறை அருள்' என்று வளர்த்து வந்தான். அக்குழந்தை ஆவினால் முதலில் காப்பாற்றப்பட்டதால் ஆபுத்திரன், (பசுவின் புத்திரன்) என்று பெயரிட்டு வளர்க்க அவன் பசுவின் பேரில் தனிப் பேரன்புடன் கலைகளைக் கற்றுச் சிறந்தான்.

அவ்வூரில் வேள்விச்சாலையில் அவி உணவு அளிப்பதற்காக ஒரு பசு அருகே கட்டப்பட்டிருந்தது. ஆபுத்திரன் அதைக் கண்டு அதைக் காப்பாற்ற எண்ணி இரவில் யாரும் அறியாவண்ணம் அதை ஓட்டிக் கொண்டு வெளியூர் செல்லப்புறப்பட்டான். பசுவைக் காணாத உரியோர் அவனைப் பின் தொடர்ந்து ஊருக்கு வெளியில் செல்வதைக் கண்டு அவனை நையப் புடைத்துப் பசுவை மீட்டனர். இக் கொலைத் தொழில் செய்கின்ற ஊரில் வாழ்வது நன்றன்று என்று வேறு ஊருக்குச் சென்று, குளிரில் நடுங்கி நள்ளிரவில் ஒரு பாழும் சத்திரத்தை அடைந்தான். அங்கு அவன் உறங்குவதைக் கண்டு பசிப்பிணி உற்றவர் ஆபுத்திரனைப் பார்த்து 'வயறு காய் பெரும்பசி மலைக்கும்' என்றனர். 'வயிற்றைக் காய்கின்ற பெரும்பசி வருத்துகின்றது' என்றனர். 'ஏற்றூண் அல்லது வேற்றூண் இல்லோன்' பிறரிடத்து யாசித்துப் பெறும் உணவைத் தவிர வேறு உணவு அறியாத அவன் மிக்க வருந்தினான். அருகில் உள்ள சிந்தா தேவியின் கோயிலில் சென்று வணங்கினான். 'சிந்தா தேவி செழுங் கலை நியமத்து நந்தா விளக்கே! நாமிசைப் பாவாய் வானோர் தலைவி! மண்ணோர் முதல்வி! ஏனோர் உற்ற இடர்களைவாய்' என மனமுருகிப் பாடித் தொழுதான். சிந்தாதேவியும் பின்வருமாறு அருள் பாலித்தாள்.

---

திரு. T. கஸ்தூரிரங்கசாமி M.A., M.Ed.
கோவை.

---

"ஏடா அழியல் எழுந்திது கொள்ளாய்
நாடு அறங்கூறினும் இவ்வோடு அறம்
கூறுது
வாங்குநர் கையகம் வருந்துதல்
அல்லது
தான் தொலைவு இல்லாத் தகை
மையது"

என்று உணவு எடுக்க எடுக்க குறைவு உறாத அமுதசுரபியைக் கொடுத்தாள். அதைப் பெற்ற ஆபுத்திரன்,

'காணுர், கேளார், கால்முடம் பட்டோர்
பேணுநர் இல்லோர் பிணியறிவுற்றோர்
யாவரும் வருக'

என்று அழைத்து எல்லோருடைய பசிப்பிணியையும் எடுக்களடுக்க குறையாத அமுதசுரபியைக் கொண்டு போக்கினான். பசி தீர்ந்தோர் புகழ் அளவையில் அடங்காது என்று பின் வரும் பாடல் உணர்த்துகிறது.

குடிப்பிறப்பு அழிக்கும் விழுப்பம்
கொல்லும்
பிடித்த கல்வி பெரும் புணை விடும்
நாணணி களையும், மாணெழில்
சிதைக்கும்
பசிப்பிணி என்னும் பாவி'

என்பது பாடல்.

பசிப்பிணி ஒருவரின் குடிப்பிறப்பின் பெருமையை அழிக்கும். பற்றுக் கோடாகக் கொண்ட கல்வியாகிய படகை வீழ்த்தி விடும். மேன்மையின் அழகினை அழிக்கும் என்ற பசிப்பிணி பாவியாகவுள்ள உண்மைகளையும், 'உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோரே' என்பதையும் இக்கதை நமக்கு நினைவூட்டுகிறது.

மண்ணுலகில் உள்ள ஆபுத்திரனின் அறநெறி வாழ்க்கையினால் விண்ணுலகில் உள்ள இந்திரனின் ரத்தினக்கம்பளம் நடுங்கியது. அதனால் அவ் இந்திரன், நாட்டில் மழை வளம் பெற்று விளை வளம் உறும்படி செய்தான். இதனால் ஆபுத்திரனின் அமுதசுரபி பயனற்றுப்போய்விட்டது. மணிபல்லவம்என்ற தீவில் உள்ள கோமுகிப் பொய்கையில் பிறர்க்குஉதவாத இந்த அமுதசுரபியை நீரில் அமிழ்த்தித் தானும் மூழ்கி உயிரினை மாய்த்துக் கொண்டான். பின்னர் இந்த அமுதசுரபி, அருள் அறம் பூண்ட மணிமேகலையின் கையில் அகப்பட்டு அறநெறி பூண்டாள்.

இக்கதையால் அறியும் உண்மைகள் யாவை? அவை நம் நாட்டில் எவ்வாறு பயன்படுகின்றன. அதற்குச் சான்றாக நம் நாட்டில் பல அருட் கோயில்களில் இப்பசிப்பிணி என்னும் பாவியை அழிக்க அரும் பாடுபடுகின்றார்கள். நமது திருவேங்கடத்தான் கோயிலில் பக்தர்களின் வெள்ளம் வரிசையில் மணிக்கணக்காக நின்று ஏழு மலையான் கோவிந்தனை உடல், உயிர், ஆவியெல்லாம் அர்ப்பணித்து, உளமார வணங்கி, நலமார வாழச் செய்கிறது. அன்பர் பக்தி வெள்ளத்தில் பொங்கித் ததும்பி வடிந்து எல்லாரையும் ஒன்றாகக் கூட்டி 'எல்லோரும் ஓரினம் எல்லாரும் இந்தியர்' என்ற உணர்வை ஊட்டி நம்மை இறையின்பத்தில் மறக்கச் செய்கின்றது. அது மட்டும்தானா? பசிப்பிணி மருத்துவர்கள் பலர் இறைவனின் கட்டளையினால் செவி சாய்த்து தலை வணங்கி நாள்தோறும் பல்லாயிரக்கணக்கான அடியார்கட்கு நல்லுணவு கோயிலில் நிர்வாகத்தார் மூலம் அளித்து இறையருள் பெறுகின்றார்கள்.

'அன்பர் பணி செய்ய ஆளாக்கி விட்டு
விட்டால்
இன்பம் வந்து எய்தும் தானே
பராபரமே'

என்பதை திருமலையாண்டான் செல்வந்தர்கட்கு உணர்த்துகிறான் போலும்.

'மக்கள் சேவையே மகேசன் சேவை' என்று ஒப்புக் கொண்ட நம்மில் சிலர் தமக்கென வாழா பிறர்க்குரியாளராக வாழ அனாதை இல்லம், முதியோர் இல்லம் முதலிய சமூக சேவை இல்லங்கள் வைத்து எல்லாரும் ஒரு குலம் எல்லாரும் ஓர் இனம் எல்லாரும் இந்நாட்டு கடவுள் அடியார்கள் என்று கருதித் தன்னை அறப்பணியில் அர்ப்பணிக்கின்றார்கள்.

உண்டாலம்ம இவ்வுலகம்
... .................
தமக்கென முயலா நோன்றாள்
பிறர்க்கென முயலுநர் உண்மை
யானே

என்று புறம் பேசுகிறது.

உலகம் மண்ணோடு மண்ணாகப் புதைந்து அழியாமல் ஏன் இருக்கிறது என்றால் அதற்கு அப்புற நானூற்றுப்பாடல் பதில் கூறுகின்றது. தான் மட்டும் வாழ்ந்தால் போதாது பிறர் துன்பம் துடைக்க வேண்டும், பிறர் இன்பமாக வாழ வேண்டும் என்று பிறருக்காக வாழுபவர் இவ்வுலகில் இருப்பதால்தான் உலகம் அழியாமல் இருக்கிறது. அது தான் கடவுளை அடைய நம்மைக் கொண்டு செலுத்தும் நல்ல வழியுமாகும்.



## புஷ்பங்கள் 8

எம்பெருமானை அர்ச்சிப்பதற்கு உகந்த புஷ்பங்கள் எட்டு என்று கூறுவர் பெரியோர். அவை முறையே பின்வருமாறு :

1. அஹிம்சை 2. இந்திரிய நிக்ரஹம் 3. தயை 4. க்ஷமை
5. ஜ்ஞானம் 6. தபஸ் 7. த்யானம் 8. சத்யம்

இவைகளையே எம்பெருமான் நம்மிடத்தில் எதிர்ப்பார்க்கிறான்.

எம்பெருமான் கண்ணனுக்குப் பெரியாழ்வார் சூட்டிய மலர்களைக் காண்போம்.

1. செண்பகப் பூ 2. மல்லிகை 3. பாதிரி 4. செங்கழுநீர்
5. புன்னை 6. குருக்கத்தி 7. இருவாட்சி 8. கருமுகை

இவையே பெரியாழ்வாரால் கண்ணனுக்குச் சூட்டப்பட்ட பூக்களாகும்.

— தொகுத்தவர் : அடியார்க்கடியான் - கேதோண்டபட்டி.

# கம்பனும் ஸ்ரீ வைஷ்ணவமும்



மூதறிஞர்கள், மேற்கோள்களுடன் கவியரசன் கம்பன் ஒரு வைஷ்ணவன் என்று நிர்த்தாரணம் பண்ணியுள்ளார்கள். இது யாவரும் அறிந்த விஷயம். கங்கைப் படலத்திலும், குகப் படலத்திலும் இது நன்றாகப் பரிமளிக்கிறது.

குகன் ஒரு சபரன். ஒரு பிரதி பலனையும் எதிர்பார்க்காமல் சக்ரவர்த்தி திருமகனிடம் தானே முன் வந்து தாஸபூதனாகக் கைங்கர்யம் செய்ய கரம் குவித்து, சிரம் சாய்த்துப் பிறகு சாஷ்டாங்கமாய் எண் சாண் கிடக்கையாய் கிடந்து எழுந்து வாய் பொத்தி கைங்கர்யபரனாய் ஆக்ஞைக்காகக் காத்திருக்கிறான். ஸ்ரீஇராமச் சந்திரனும், இளைய பெருமாளும், பிராட்டியும் பர்ணசாலையில் எழுந்தருளியிருப்பதை அறிகிறான் நிஷாத தலைவனாகிய குகன்.

நின்றான் நெஞ்சில் நிரம்புறும்
அன்பால்
இன்றே நின்பணி செய்திட இறைவா
நன்றே வந்தனன் நாயடியேன்யான்
என்றே கூவினன் எயினரின்
இறையோன்.

இவ்விடத்தில் ஸ்ரீ இராமபிரானை விளிக்கும் பொழுது "இறைவா" என்கின்ற பிரயோகத்தைப் பார்க்கிறோம். இந்தச் சொல்லுக்கு "அரசனே" என்றும் "பகவானே" என்றும் அர்த்தம் கொள்ளலாம். 'இன்றே நின்பணி செய்திட இறைவா' என்பதில் ஒரு நயமுள்ளது. "அடியேன் இதுகாறும் வயிற்றைக்கழுவி உடலைக் காக்க இந்தப் படகோட்டிப் பணியிலிருந்து வருகிறேன். இனிமேல் இந்த ஆன்மா கடைத்தேற ஸ்ரீ இராகவனுக்குப் பணிவிடை செய்யக் காத்திருக்கிறேன்" என்பது தொனிக்கிறது. மேலும் குகனைக் குறிக்குமிடத்து கவி, 'எயினரின்இறையோன்' என்கின்றான். அதாவது வேடுவர்களுக்கு அரசன் என்று புலனாகிறது. அதனால் முதலில் கூவி அழைத்த "இறைவா" என்பது சாக்ஷாத் "நாராயணனையே" குறிக்கும் என்பதில் ஐயத்திற்கு இடமில்லை.

பரிவோடு அழைத்த அக்குரல் உள்ளிருந்த இளைய பெருமாளைவெளியே வர வழைத்தது.

கூவாமுன்னம் இளையோன்குறுகி நீ
யாவன் யாவென அன்பின்
இறைஞ்சினன்
தேவ நின்கழல் சேவிக்க வந்தனன்
நாவம் வேட்டுவன் நாடியேன்
என்றான்.

வெளியே வந்த இளையோன் "நீயாவன், வந்த காரியம் யாது" என்று வினவ, அதற்கு பவ்யமாக பதில் கூறும் குகனின் சொல்லழகு ஸ்ரீவைஷ்ணவ சம்பிரதாயத்திற்கு ஒரு எடுத்துக் காட்டாகவுள்ளது.

திரு. லாடபுரம் பா. சம்பத்,
சென்னை-44

"தெய்வமே! நாய் போல் அடிமைப்பட்டவனாகிய யான் கங்கையைக் கடக்குமாறு ஓடங்களைகொண்டுள்ள வேடுவனாவேன். தேவரீருடைய திருவடிகளைத் தரிசிக்கும் பொருட்டு வந்தேன்" என்றான்.

இப்பாசுரத்தை பாஷ்யமாய் பார்க்குமிடத்து குகன் இலக்ஷ்மணனைப் பார்த்தமாத்திரத்தில், ஸ்ரீ இராமன் என்று எண்ணித் தெண்டன் சமர்ப்பிக்க வந்ததாகவும், ஸ்வாமிக்கு அடிமை செய்யக் காத்திருப்பதாகவும் அமைந்துள்ளது. பின்னே பரதன் வருகின்ற கட்டத்தில்,

"நம்பியும் என் நாயகனை ஒக்கின்றான்
அயல் நின்றான்
தம்பியை ஒக்கின்றான்"

என்று குகன் மனதில் நினைக்கின்றான். அதனால் மேலே சொன்ன பிரகாரம் குகன் நினைத்ததில் நியாயம் உண்டு. வந்து வினவியது இலக்ஷ்மணன் என்று தெரிந்திருந்து "நின்கழல் சேவிக்க வந்தனன்" என்று வேடுவன் நினைத்திருந்தாலும் பொருந்தும். "தேவரீர் தினம்தொழுகின்ற இராம பிரானது திருவடிகளைச் சேவிக்கும் பொருட்டு வந்தேன்" என்பதாகும்.

மேலும் இளைய பெருமாளையே திருவடிகளாக எண்ணினான் குகன் என்றும் கூற ஹேது உண்டு. கம்பன் சொல்விளையாட்டில் வல்லவனல்லவா! ஆழ்வாராதிகளின் பாசுரங்களில் மூழ்கித் திளைத்து அவைகளில் ஈடுபட்டு கம்பநாட்டாழ்வார் என்றழைக்கப்படுவதில்லையா! அதற்கு மேற்கோளாக கீழே உள்ள பாசுரம் இடம் கொடுக்கிறது.

"சென்றால் குடையாம், இருந்நால்
சிங்காதனமாம்
நின்றால் மரவடியாம் நீள்கடலுள்
என்றும் புணையாம், மணி விளக்காம்
பூம்பட்டாம் புல்கும் அணையாம்
திருமாற்கு அரவு."

குகன் இளைய பெருமாள் என்று தெரிந்து கொண்டு, அவரை ஆசார்ய ஸ்தானத்திலிருத்தி அவருடைய திருவடிகள்மூலம் பெருமாளின் திருவடித் தாமரைகளை சேவிக்க ஆசைப்பட்டான் என்றும் கொள்ளலாம். இங்கே சன்னதி சிஷ்யர்கள் அவ்வப்பொழுது எழுந்தருளி பட்டத்தை அலங்கரித்து வரும் ஸ்ரீமதழகிய சிங்கரை சேவித்து விட்டுப்பிறகு மாலோலன் சேவைக்கு எழுந்தருளுவதை நினைவில் கொள்ளலாம்.

கோவில்களுக்குச் செல்கிறோம். அதற்காக உபகாரமும் எடுத்துச் சென்று பெருமாளுக்குக் கண்டருளப் பண்ணுகிறோம். அவரவர் அகங்களில் எழுந்தருளியிருக்கும் சாளக்ராமங்களுக்கும் திருவாராதனம் மூலமாக அமுது செய்யப்பண்ணி பகவத் பிரசாதமாக அருந்துகிறோம்.



**ஸ்ரீ சுப்ரமண்ய ஸ்வாமி கோயில் வளாகத்தில் சிவலிங்க பிரதிஷ்டை, கோருகல்லு-ஆந்திர மாநிலம்-ஜி. உமா.**

இங்கே இறைவனை தெண்டன் சமர்ப்பிக்க வந்த குகன் அன்பு காணிக்கையாக அவன் அன்றாடம் அருந்தும் மீனும் தேனும் ஆராய்ந்து கொண்டு வந்துள்ளான். அந்த சமயம் ஸ்வாமி அருகாமையிலிருந்த பருவஞ்சென்ற முதிய பெருந்தவசியரை நோக்கி இளநகை செய்து பிறகு குகனைப் பார்த்து, "இந்த உபகாரப் பொருள்கள் உன்னுடைய அன்பின் முதிர்ந்த நிலை பக்தியாகப் பெருக்கெடுப்பதைக் குறிக்கும்; மனமுவப்பக் கொண்டு வந்தவனாகும்; அமுதத்தினும் சிறந்தவையாகும்; அவைகள் உன்பக்தியினால் பரம பவித்ரமானது: சில காரணத்தால் நீ கொணர்ந்தவற்றை உட்கொள்ளாவிட்டாலும் நாம் அவற்றை அங்கீகரித்தால் சாப்பிட்டதற்குச் சமானமாகும்" என்று நிஷாதன் மனமுகக்குமாறு இன்மொழி கூறினான் சக்ரவர்த்தித் திருமகன்.

இருத்தி ஈண்டு என்னலோடும்
இருந்திலன் எல்லை நீத்த
அருத்தியன் தேனும் மீனும் அமுதினுக்கு அமைவதாகத்
திருத்தினன் கொணர்ந்தேன் என்
கொல்திருவுளமென்னவீரன்
விருத்த மாதவரைநோக்கி முறுவலன்
ளியம்பலுற்றான்.

அரியதாம் உவப்ப உள்ளத்து
அன்பினால் அமைந்தகாதல்
தெரிதரக் கொணர்ந்த என்றால்
அமிழ்தினும் சீர்த்த அன்றே
பரிவினில் தழிஇய என்னில்
பவித்திரம் எம்மனோர்க்கும்
உரியன இனிதின் நாமும்
உண்டனெம் அன்றோ என்றான்.

ஸ்ரீஇராகவன் குகனைப்பார்த்து அன்றிரவு அவனுடைய சுற்றத்தாரோடும் இருப்பிடம் சேர்ந்து விடியற்காலை நாவாயோடு வருக என்று பணித்தான். அதற்கு வேடர் குலத்தலைவன் "பீதாம்பரமணிந்து மணி முடியைப் புனைந்த கோலத்தோடு சேவிக்க வேண்டியிருக்க, தங்களை வற்கலையினுடன் சடாமுடியாக தவக் கோலத்தில் காண்பது என்பதைவிட அடியேனுடைய கண்களைப் பிடுங்கி எறிவேனாயின் என்னுடைய அன்பு விளங்கும்; இல்லாவிடில் நான் தங்களை

டம் காண்பாகும் அன்புவெறும் வேஷமாகும்; ஆயினும் கடைசிபக்ஷம் தங்களைப்பிரிந்து என்னிடத்திற்குச் செல்லப்போவதில்லை; தங்களுக்கு அடியேனுல் இயன்றளவு அடிமை செய்யவே விரும்புகின்றேன்'' என்ருன். இங்கே ஆண்டாளின் திருப்பாவையில் வருகின்ற ''உற்றேமேயாவோம், உனக்கே நாம் ஆட்செய்வோம்'' என்ற பிரகாரம் ஜீவாத்மாவுக்கு பரமாத்மாவிடமுள்ள ஒழிக்க ஒழியாத பிரிக்க முடியாத உறவை உணர்த்துகிறது.

பரதாழ்வான் சுற்றமும்நட்பும்சூழ சுமந்தரருடன்''மன்னனைக்கொணர'' காட்டிற்கு வருகிருன். குகனே அந்த சேனை வருவதைக் கண்டு ஐயமுற்று ஸ்ரீஇராமபிரானிடத்திலுள்ள வர்த்ஸல்யத்தாலும் பிரிக்கமுடியாத ''தோழமை'' கொண்டதாலும், பரதன் நாடு கடத்தியதுமல்லாமல் காடு கடத்தவும் வருகிருனென்று கோபத்தின் உத்வேசத்திஞல் உந்தப்பட்டு, கங்கைக் கரையில் தங்கள் இனத்தாருடன் அங்குமிங்கும் அலைகிருன். பின்னே ''என் பெருமான் பின் பிறந்தார் இழைப்பரோ பிழைப்பு'' என்று உணருகிருன். வந்த நம்பிக்கு ஸ்வாகதம் சொல்ல தனியாகக் கங்கையைக் கடந்து வடகரை வந்து எதிரே சேவித்துக் கொண்டே செல்கிருன்.

வந்தெதிரே தொழுதானை
வணங்கிஞன் மலரிருந்த
அந்தணனும் தனைவணங்கும்
அவனும் அவனடி வீழ்ந்தான்
தந்தையினும் களிகூரத் தழுவிஞன்
தகவுடையோர்
சிந்தையிலும் சென்னியிலும்
வீற்றிருக்கும் சீர்த்தியான்.

இந்தப் பாசுரம் நீண்ட காலமாக சர்ச்சைக்குள்ளதாக அமைந்துள்ளது. யார் திருவடிகளில் யார் வீழ்ந்தார்கள். இன்னும் தீர்வுகாணுத கேள்விக் குறியாயுள்ளது. பொதுவாக குகன் தான் பரதனது திருவடித்தாமரைகளைப்பற்றிஞன் என்பது பிறகு வரும் பாசுரத்திஞல் தெரிகிறது. இருந்தபோதிலும் ஒரு சாரார் தக்கச் சான்றுகளுடன் வேறு விதமாகவும் வியாக்யானம் செய்துள்ளார்கள். கம்ப நாட்டாழ்வார் இருவருடைய திருநாமங்களையும் பாஹ்யமாக தெரியப்படுத்தாமல் சூத்திரமாக அமைத்துள்ளார். இந்தக் கட்டத்தில் சந்தர்ப்ப சூழ்நிலைக்கு ஏற்றவாறு அர்த்தம் கொள்ள ஸ்ரீவைஷ்ணவ சம்பிரதாயம் நிறைய இடம் கொடுக்கிறது. அதாவது பரதாழ்வானும், குகப்பெருமானும் ஒரே சமயத்தில் ஒருவர் திருவடியில் மற்றொருவர் மாறிமாறி சேவித்தனர் என்பது சாலப்பொருந்தும். கம்பன் பரம வைஷ்ணவனுயிருப்பதால் இதை மனதில் உன்னி சம்பிரதாயத்திற்கு ஏற்றம் கொடுக்கிருன் என்ருல் மிகையாகாது.

வேடுவத்தலைவன் பரதனுடைய விருப்பத்திற்கிணங்க இலக்ஷ்மணன் இராப்பொழுது கழித்த இடத்தைக் காண்பித்து அவன் இருந்த நிலையை விளக்குகிருன்.

அல்லையாண்டு அமைந்தமேனி
அழகனும் அவளும் துஞ்ச
வில்லை யூன்றிய கையொடும்
வெய்துயிர் பொடும் வீரன்
கல்லை யாண்டுயர்ந்த தோளாய்
கண்கள் நீர் சொரியக்கங்குல்
எல்லை காண்பளவும் நின்ருன்
இமைப்பிலன் நயனம் என்ருன்.

ஸ்ரீமந் நாராயணனின் ஐந்து நிலைகளில் ஒன்ருகிய 'வ்யூகம்' இங்கே கம்பனுடைய உள்ளத்தில் உதித்தது போலும்! இந்த நிலையில் இளையபெருமான் ஆதி சேஷஞக அனுதினமும் பெருமாளையும் பிராட்டியையும் சேர்க்கையில் சேவித்து வந்தவனுக்கு, பூலோகத்தில் அந்த ப்ராப்தி இல்லாக் குறையை நிவர்த்திக்க சக்ரவர்த்தித் திருமகனும், சீதாதேவியும் சேர்ந்து துயின்றனர். பாற்கடலில் பாயல் கிடக்கும்பொழுது பெருமாளுக்கும் தாயாருக்கும் படுக்கையாயிருந்து கைங்கர்யம் செய்தான். 'விபவ'த்தில் கண் துஞ்சாமல் விடியும் வரை வெளியிலேயேயிருந்து பாதுகாத்து வந்தான். [illegible] குண்ட சேவையாக எடுத்துக்கொள்ளலாம். இராமனை வருணிக்கும் கவி ''அழகன்'' என்றும் சீதாப்பிராட்டியை ''அவளும்'' என்று குறிப்பிடுகிருன். இங்கேயும் ஒரு ஸ்வாரஸ்யமான சம்பிரதாயத்திற்குச்சேர அர்த்தம் பண்ணும்படி அமைந்துள்ளது. சொல்லுகிறவன் குகன். கேட்பவன் பரதன். இராகவனை அழகன் என்பதில் யாதொரு சந்தேகமில்லை. மைதிலியை அவள் என்று சொல்லி மற்றவனுடைய மனைவியின் அழகைக் கூறுவது பண்பாடில்லை ஏன்பதாகும்.

இந்த இடத்தில் பெரியாழ்வாரின் ''பல்லாண்டு'' கவிச்சக்ரவர்த்தி மனதில் உதித்திருக்கவேண்டும் என்பது பல மேதைகளின் கருத்து. பெருமாளுக்கும் வக்ஷஸ்தலத்தில் நித்யவாஸம் செய்யும்பிராட்டிக்கு பல்லாண்டு கூறவந்த பெரியாழ்வார் பாஞ்சசன்னியத்திற்குப் பல்லாண்டு பாடும்பொழுது ''படைபோர்புக்கு முழங்கும் அப்பாஞ்ச சன்னியமும் பல்லாண்டே'' என்கிருர். இந்த ஸ்ரீசூக்தியில் 'அப்' என்ற அடைமொழியிஞல் பெருமாளின் கரத்தை அலங்கரிக்கும் அந்த சங்கத்தைத்தான் குறிக்குமே தவிர மற்றென்று இருக்க முடியாது என்பது போல் 'அவள்' என்பது பிராட்டியைத்தான் உணர்த்தும் என்று இங்கிதத்தின் எல்லையை தெரியப்படுத்துகிருன். கவிச்சக்ரவர்த்தி சூடிக்கொடுத்த சுடர்க்கொடியும் ''ஞாலத்தையெல்லாம் நடுங்கமுரல்வனபாலனன்ன வண்ணத்துள் நின் பாஞ்ச சன்னியமே, போல்வன சங்கங்கள் பொய்ப்பாடுடையனவே'' என்று பாடுவதை மனதில் கொள்ளலாம். இன்னும் கவியரசன் முதல்நூலின் மார்க்கமாகச் சென்று சரணுகதி தத்துவம், அதற்கு அனுகுணமான அங்கங்கள் பிரபத்தி, பிரபன்னன் என்பவைகளைப்பற்றியும் ஸ்ரீவைஷ்ணவ சம்பிரதாயத்திற்குச் சேர தன் ''இராமாவதாரம்'' என்ற காவியத்தில் புகுத்தியுள்ளான்.

௨௦௨

# ஆதி சங்கரர்

மாருதிதாசன்-காஞ்சிபுரம்.

உலகில் வாழும் மக்கள் நன்னெறியில் ஒழுகுதற்குச் சமயங்கள் துணை புரிகின்றன. சமயங்கள் பல. சுமார் ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னர் சமயங்கள் நூற்றுக்கும் மேலாக நம் நாட்டில் இருந்து வந்தன. அவற்றை ஒழுங்குப் படுத்திச் சமய நெறிகளை வகுத்துத்தந்தவர்கள் ஆச்சார்யர்கள். அவர்களுள் முதன்மையானவர் ஆதிசங்கரர். அவரின் வாழ்க்கை வரலாறு பற்றிச் சுருங்கக் காண்போம்.

கேரள மாநிலத்தில் காலடி என்றொரு திருத்தலம் உள்ளது. அங்கே சிவகுரு என்பவர் வாழ்ந்து வந்தார். அவருடைய துணைவியார் பெயர் ஆரியாம்பாள் என்பது. இவர்கள் செய்த தவப்பயனாக இவர்களுக்கு ஆண்மகவு ஒன்று அவதாரம் செய்தது. இக்குழந்தைக்குச் சங்கரன் என்னும் திருநாமம் சூட்டப்பெற்றது. சிவபெருமான் அருளாலும், சிவபெருமானின் அம்சமாகவும் தோன்றிய இக்குழந்தைக்குச் சங்கரன் என்னும் பெயர் வைத்தது பொருத்தம்தானே!

இவர் அவதாரம் செய்த ஆண்டு கி. பி. 508 என்று சிலரும், கி. பி. 509 என்று சிலரும் ஆராய்ந்து கூறியுள்ளனர். சங்கரருக்கு ஐந்து ஆண்டுகள் நிறைவதற்குள்ளாகவே தந்தையார் சிவபதம் அடைந்துவிட்டார். எனவே, தாயாகிய ஆரியாம்பாவே தாயும் தந்தையுமாக இருந்து சங்கரரை வளர்த்து வந்தார்.

சங்கரருக்கு ஐந்து வயதில் உபநயனம் செய்விக்கப்பட்டது. அக்கால முறைப்படிச் சங்கரர் குருகுலத்தில் சேர்ந்து பாடம் பயின்றார். மூன்று வயதிற்குள்ளாகவே பல மொழிகளை அறியும் திறனைப் பெற்றார். ஐந்து வயதிற்குள் நூல்கள் பலவற்றிலும் பயிற்சி பெற்றார். எனவே, ஐந்து வயதில் வேதங்களைப் பயில்வது சங்கரருக்கு எளிதாக இருந்தது.

சங்கரர் தன் தாயிடம் மிகுந்த பக்தி கொண்டிருந்தார். ஒரு சமயம் ஆரியாம்பா நோய்வாய்ப்பட்டிருந்தார். வழக்கமாகச் சென்று நதியில் குளிக்க இவரால் முடியவில்லை. எனவே, சங்கரர் தன் தாய்மீது கொண்ட பக்தியினால், அந்நதியையே தன் வீட்டு வாயிலுக்கு வருமாறு செய்துவிட்டார்.

சங்கரர் குருகுல வாசம் செய்து கொண்டிருந்தபோது அற்புதம் ஒன்று நிகழ்ந்தது. வழக்கம் போல் ஒரு நாள் சங்கரர் பிட்சை வாங்கி வருவதற்கு ஏழை அந்தணர் ஒருவர் வீட்டின் முன் நின்றார். அந்த வீட்டு அம்மாள் பிட்சை போடுவதற்கு ஒன்றுமில்லாமையால், வீட்டில் இருந்த நெல்லிக்கனி ஒன்றைக் கொண்டு வந்து பிட்சைப் பாத்திரத்தில் போட்டாள். அவ்வீட்டின் வறுமை நிலையைத் தன் மதி நுட்பத்தால் உணர்ந்த சங்கரர் உள்ளம் உருகினார். அவ்வீட்டாரின் வறுமையைப் போக்கியருளுமாறு மகாலட்சுமியைக் குறித்து வழிபாடு செய்தார். அப்போது அவர் பாடியருளியதே 'கனகதாரா ஸ்தோத்திரம்' என்னும் பாமாலை. அப்பாமாலையைக் கேட்டு மகிழ்ந்த மகாலட்சுமி தங்க நெல்லிக்கனிகளை மழைபோல் பொழியச் செய்து அவ்வீட்டாரின் வறுமையைப்போக்கினாள்.

சங்கரர் தம்முடைய எட்டு வயதிற்குள்ளாகவே வேதங்கள், தர்ம நூல்கள் முதலானவற்றில் முழுவதுமாகத் தேர்ச்சி பெற்றார். வழக்கம் போல் ஒரு நாள் தம் தாயாருடன் நீராடுதற்கு நதிக்குச் சென்றார். நதியில் இறங்கியதும் முதலை ஒன்று சங்கரரின் காலைக் கவ்விப் பிடித்துக் கொண்டது. இது கண்டு தாயார் மனம் துடித்தார். தன் மகன் உயிர் பிழைத்தால் போதும் என்று எண்ணினார். இந்தச் சமயத்தைச் சங்கரர் நன்கு பயன்படுத்திக் கொண்டார். தாம் சந்நியாசம் மேற்கொண்டால், இப்பிறவி நீங்கி மறுபிறப்பு எடுத்ததற்குச் சமம் என்று தம் தாயிடம் கூறினார். தன் மகன் உயிர் பிழைத்தால் போதும் என்று எண்ணிய ஆரியாம்பாவின் அனுமதி பெற்றுச் சங்கரர் அந்நதியிலிருந்தபடியே துறவறம் பூண்டார். சந்நியாசத்தால் மறுபிறவி பெற்ற சங்கரரின் காலை முதலை விட்டு விட்டது. சங்கரரும் உயிர் பிழைத்துக் கரையேறினார்.

துறவறம் பூண்டதால், சங்கரர் காலடியையும், தம் தாயையும் விட்டுப் பிரிந்து செல்ல முடிவு செய்தார். அங்கிருந்து புறப்பட்டு மத்தியப் பிரதேசத்தை வந்தடைந்தார். ஓங்காரேஸ்வரர் எழுந்தருளியிருக்கும் நர்மதை நதிக்கரையை வந்தடைந்தார். யோக நிலையில் இருந்த கோவிந்த பகவத் பாதரைக் கண்டு வணங்கி நின்றார்.

நிஷ்டை கலைந்த கோவிந்த பகவத் பாதர் 'நீ யார்?' என்று சங்கரரைக் கேட்டார். அக்கேள்விக்கு விடையாகப் பத்து சுலோகங்களைச் சங்கரர் கூறினார். அந்நூலே 'நிர்வாண சதகம்' என்பதாம். பின்பு கோவிந்த பகவத் பாதரைக் குருவாகச் சங்கரர் ஏற்றுக் கொண்டார். குருவின் அனுமதியுடன் அன்று முதல் சங்கரர், சங்கராச்சார்யார் என்னும் திருநாமம் பெற்றார். சங்கராச்சார்யாரிடம் மிகுந்த குண நலன்கள் இருப்பதைக் கண்டு கோவிந்த பகவத் பாதர் பெரிதும் மகிழ்ச்சியடைந்தார். எனவே, அவருக்குக் குருபரம்பரையை விரிவாக எடுத்துக் கூறினார். பிரம்ம சூத்திரம், உபநிஷதங்கள், கீதை, விஷ்ணு சகஸ்ரநாமம் முதலானவற்றுக்கு விளக்கவுரை (பாஷ்யம்) எழுதுமாறு ஆணையிட்டார். சங்கரரும் குருவின் ஆணையை ஏற்றுப் பாஷ்யங்களை இயற்றினார்.

பின், குருவின் அனுமதி பெற்றுச் சங்கரர் காசிக்குச் சென்ருர். அங்கே கங்கையில் புனித நீராடினர். தம் சீடர்களுக்குச் சூத்திர பாஷ்யத்தைச் சொல்லிக் கொண்டிருந்தார். அப்போது முதியவர் வடிவில் வியாசர் அங்கே வந்தார். கேள்விகள் சிலவற்றைச் சங்கரரிடம் கேட்டார். சங்கரரும் தக்க விடைகளைக் கூறினர். சூத்திர பாஷ்யம் குறித்துச் சங்கரருக்கும் முதியவருக்கும் எட்டு நாள்கள் உரையாடல் நடந்தது. இறுதியில் வியாசர் தன் சுய வடிவத்தைக் காட்டினர். சங்கரர் இயற்றிய சூத்திர பாஷ்யமே பொருத்தமானது என்று சிறப்பித்துக் கூறினர்.

வியாசர் வாக்காலேயே சிறப்பித்துக் கூறப்பட்ட பெருமையை அடைந்த சங்கரர் தாம் இயற்றிய பிரம்ம சூத்திரப் பாஷ்யத்தை ஊர் ஊராகச் சென்று விளக்கிக்கூறி வந்தார்.

ஒரு சமயம் சங்கரர் காசியில் கங்காஸ்நானம் செய்துவிட்டு வரும் போது நான்கு நாய்களுடன் சண்டாளன் ஒருவன் வந்தான். அவனை விலகிப் போகும்படிச் சங்கரர் கூறினர்.

தன்னை விலகிச் செல்லுமாறு கூறிய சங்கரரைப் பார்த்துச் சண்டாளன் சிரித்தான். 'விலகிப்போ என்று சொன்னது என் உடலையா? ஆத்மாவையா?' என்றும் கேட்டான். சங்கரர் தெளிவு பெற்ருர். 'மாநீஷா பஞ்சகம்' என்னும் ஐந்து சுலோகங்களைத் தம் வேதாந்தத் தத்துவக் கருத்துக்கள் விளக்கப் பாடி அதனையே பதிலாகக் கூறினர். சண்டாளனக வந்த சிவபெருமான் சங்கரருக்குக் காட்சி தந்து அருள்புரிந்தார்.

ஒரு நாள், சங்கரர் கங்கைக்கு மறுபுறம் உள்ள தம் சீடனை இக்கரைக்கு வருமாறு கூறினர். குரு பக்தியால் சீடனும் கங்கை நீரின் மேல் நடந்து வந்தான். அந்தச் சீடனின் கால் வைக்கும் இடமெல்லாம் தாமரை மலர் தோன்றி அவன் பாதங்களைத் தாங்கின. அதனுல் அந்தச் சீடனுக்குப் பத்மபாதர் என்னும் திருநாமம் அன்று முதல் வழங்கலாயிற்று.

சங்கரர் காசியிலிருந்தும் புறப்பட்டுப் பத்ரிநாத் சென்ருர். அங்கு வேதவியாசரைக் கண்டு உண்மைப் பொருளைக் குறித்து உரையாடினர். அப்பொழுது அவருக்கு வயது பதினுறு. மேலும் பதினுறு ஆண்டுகள் இருந்து வேதங்களுக்கு விளக்கம் கூறி அத்வைதத்தைப் பரப்புமாறு அருள் புரிந்தார். பின்னர், கேதாரநாத் சென்ருர். அங்கே தம் பூதவுடலை நீத்தார். தம் யோக சக்தியால் கைலாயம் சென்ருர். பரம சிவனை வணங்கி ஐந்து படிக லிங்கங்களைப் பெற்று வந்தார்.

'ஸௌந்தர்ய லஹரி' என்னும் நூலைப் பாடி அதில் பாதியை நந்தி தேவனுக்குக் கொடுத்தார். அங்கிருந்தும் கேதாரம் வந்து தன் உண்மை உடலை எடுத்துக் கொண்டார்.

சங்கரர் பாரத நாடு முழுவதையும் வலம்வரத் தொடங்கினர். அலகாபாத்தில் குமரில பட்டரைக் கண்டார். மண்டனமிஸ்ரர் என்பவரை வாதத்தில் வென்ருர். மண்டனமிஸ்ரரின் மனைவி சரஸவாணியையும் தம் வாதத் திறமையால் வென்ருர். மண்டனமிஸ்ரர் சுரேஸ்வரர் என்னும் பெயரைப் பெற்றுச் சங்கரருக்குச் சீடரானர். சரஸவாணியைச் சாரதா தேவியாகத் துங்கபத்ரை நதிக்கரையில் பிரதிஷ்டை செய்தார். தாம் கொண்டு வந்த ஐந்து லிங்கங்களுள் ஒன்ருன போக லிங்கத்தையும் அங்கே நிறுவினர்.

சங்கரர் செய்த அற்புதங்கள் பல. மந்த புத்தியுள்ள சீடனுக்குத் தம் அருள் திறத்தால் ஞானம் தந்து தோடகாச்சார்யார் என்னும் பெயரால் சீடராக்கிக் கொண்டார்.

ஊமைச் சீடர் ஒருவனைப் பேச வைத்து, அச்சீடனின் பேச்சை வேதாந்தப் பொருளாக அமையுமாறு அருள்புரிந்தார். அந்தச் சீடருக்கு ஹஸ்தாமலகர் என்னும் திருநாமம் சூட்டினர். சங்கரர் இவ்வாறு செய்த அற்புதங்கள் பலப்பல! சங்கரர் காலத்தில் வைதீக சமயத்திற்கு எதிரான சமயங்கள் எழுபத்திரண்டு இருந்தன. அச்சமயங்களையெல்லாம் ஆராய்ந்து அவற்றை முறைப்படுத்தி ஆறு சமயங்களை மட்டுமே நிறுவினர். இதனுல் இவருக்கு 'ஷண்மத ஸ்தாபகர்' என்னும் திருநாமம் வழங்கலாயிற்று. சைவம், வைணவம், சாக்தம், கௌமாரம், காணுபத்யம், சௌரம் என்பன அவ்வறு வகைச் சமயங்கள்.

சங்கரர் பாரத நாடு முழுவதையும் பலமுறை கால் நடையாகவே தம் சீடர்களுடன் வலம் வந்தார். இந்து சமயத்தின் வழிபாட்டு முறைகளை மக்களுக்குத் தெளிவுபடுத்தினர். சிவன், திருமால், சக்தி, கணபதி, முருகன், சூரியன் எனப் பல பெயர்களால் வழிபட்டாலும் பரப்பிரம்மம் ஒன்றே என்பதைத் தெளிவுபடுத்தினர். வேற்றுமைகளுக்கிடையே ஒற்றுமை காணப் பாடுபட்டார். சங்கரர் நிறுவிய சமயக் கொள்கைக்கு அத்வைதம் என்று பெயர். சீவான்மாவும் பரமான்வும் ஒன்றே என்பதை விளக்கினர். பக்தி, அன்பு, இரக்கம், அருள், மனிதத் தன்மை ஆகிய தெய்வீகக் குணங்களால் சங்கரர் உயர்ந்து விளங்கினர். அவருடைய அத்வைத நெறி இன்றளவும் எல்லாராலும் போற்றப்பட்டுப் பின்பற்றப்பட்டு வருகிறது.

இமயம் முதல் குமரி வரை யாத்திரை செய்து வந்த சங்கரர் மடங்கள் பலவற்றை நிறுவி வேதாந்தக் கருத்துக்களைத் தம் சீடர்கள் மூலம் பரப்பி வந்தார். சிருங்கேரியில் சாரதா பீடத்தையும், பூரியில் போக வர்த்தன மடத்தையும், (கோவர்த்தன மடம் என்று தற்போது வழங்குவது) துவாரகையில் கோமதி தீர்த்தக் கரையில் ஒரு மடத்தையும், பதரியில்

ஜோதிர் மடத்தையும், காஞ்சியில் காமகோடி மடத்தையும் நிறுவினர்.

சங்கரர் நாராயணனை வழிபாடு செய்ததன் மூலம் வைணவத்தையும் நிலை பெறச் செய்தார். சங்கரர் காலம் முதல் இன்றளவும் சங்கர மடத்தின் பீடாதிபதிகளாக விளங்குவோர் 'நாராயணஸ்மிருதி' என்றே கையொப்பமிடுவர். வேதம் ஓதும் போதும் 'ஹரி ஓம்' என்றே தொடங்குவர். நாராயண நாமத்தையே நாவார உச்சரிப்பர்.

ஆன்மா ஒன்றே! ஆன்மா மட்டுமே உண்மையான பொருள்! மற்றவையெல்லாம் பொய்யே! அறிவுள்ள பொருள்கள் உலகில் இரண்டே! ஒன்று ஜீவான்மா! மற்றொன்று பரமான்மா! இவற்றுள் பரமான்மாவாக உள்ள இறைவனைத் தவிர மற்றவை பொய்யானவையே! இத்தகைய உண்மைப் பொருளை விளக்கும் சமயக் கொள்கையான அத்வைதத்தை உலகுக்களித்தவர் சங்கரர்.

மடங்கள் பலவற்றை நிறுவி, சீடர்கள் பலரைக் கொண்டு தம் அத்வைத நெறியை நாடெங்கும் பரப்பி, நூல்கள் பலவற்றை இயற்றியும் உரையெழுதியும் அயராது தொண்டு செய்த சங்கரர் தம் முப்பத்திரண்டாம் வயதில் சிவபெருமானுடன் இரண்டறக் கலந்தார்.

நகரங்களுள் சிறந்ததும், முத்தித் தலங்கள் ஏழினுள் முதன்மையானதும், இதிகாச புராணங்களில் இடம் பெற்றதுமான காஞ்சியில் சங்கரர் தம் வாழ்நாளின் இறுதியில் எழுந்தருளியிருந்தார். காஞ்சி காமாட்சியை வழிபாடு செய்வதையே முக்கிய கடமையாகக் கொண்டிருந்தார். அக்காலத்தில் காஞ்சியில் விளங்கி வந்த சமயவாதிகளைத் தம் சமயப் புலமையால் வென்று சர்வக்ஞ பீடம் ஏறினர். காமாட்சி தேவி எழுந்தருளியிருக்கும் இடத்திற்குக் காமகோடி பீடம் என்று பெயர். காமாட்சி பீடத்தில் அமர்ந்திருந்து காமாட்சியையும் சந்திர மௌளீஸ்வரரையும் வழிபட்டு வந்தார். காஞ்சித் தலத்திலேயே சமாதியும் அடைந்தார். காமாட்சி ஆலயத்தில் சங்கரருக்குத் தனிச் சிலையும், தனிச் சந்நிதியும் உள்ளதை இன்றும் காணலாம்.

காமாட்சியின் உக்ர கலைகளை அடக்கிச் சாந்த சொரூபியாக்கி, காமகோடி பீடம் நிறுவி, ஸ்ரீ சக்கரத்தையும் பிரதிஷ்டை செய்த சங்கரருக்கு இந்திரனும் சரஸ்வதியும் தம் பட்டங்களை அளித்தனர். அதனாலேயே காமகோடி பீடாதிபதிகளாகத் திகழ்பவர்களுக்கு இவ்விரு பட்டங்களும் இன்று வரை வழங்கி வருகிறது.

மனித வாழ்க்கை ஆன்மீக நெறியோடு இயங்கத் திருவருள் புரிந்த சங்கரருக்குக் காலடியில் கீர்த்தித் தூண் ஒன்றை உலகுள்ளளவும் நிலைக்குமாறு 1978 மே 12-ல் காஞ்சிப் பெரியார் நிறுவினர். மக்கள் நலன் காத்து, மக்களிடையே விழிப்புணர்வை ஏற்படுத்தி வரும் ஸ்ரீ ஜயேந்திரரின் திருப்பணிகளுள் இக் கீர்த்தித் தூண் சிகரம் போன்றது.

*

# நோய் நொடி வராமல் இருக்க!

**தினம் இரண்டு:** போஜனம் செய்வது தினம் இரு வேளை.

**வாரம் இரண்டு:** வாரத்தில் இரு நாட்களுக்காவது கோவிலுக்குச் செல்ல வேண்டும்.

**பக்ஷம் இரண்டு:** பக்ஷம் என்பது 15 நாட்களுக்கு என்பதைக் குறிக்கும். அதில் இரண்டு எண்ணெய்க் குளியலாவது செய்ய வேண்டும்.

**மாதம் இரண்டு:** மாதம் 30 நாட்களுக்குள் இரு ஏகாதசிகள் வருகின்றன. அவை இரண்டிலும் உபவாசம் இருந்தால் நல்லது.

**ருது இரண்டு:** இரண்டு மாதங்கள் கொண்டது ஒரு ருது எனப்படும். இரு மாதத்தில் இருமுறை க்ஷவரம் செய்து கொள்வது நல்லது. அதாவது 'மாதம் ஒரு முறை. (வபனம் என்று சொல்லுவர்).

**அயனம் இரண்டு:** 6 மாதங்கள் சேர்ந்ததை ஒரு அயனம் என்று சொல்கிறோம். மூன்று மாதங்களுக்கு ஒரு முறை வயிற்றைச் சுத்தம் செய்ய வேண்டும். ப்ரவர்த்திக்கு சாப்பிடுதல் நலம்.

**ஸம்வத்சரம் இரண்டு:** 1 வருடத்தை ஸம்வத்சரம் என்று சொல்வர். ஒரு வருஷத்தில் இருமுறை தீர்த்த யாத்திரை செய்வது நலம்.

இவைகள் சாஸ்திரங்களில் உள்ளது என பெரியோர் சொல்லக் கேள்விப்பட்டு இருக்கிறேன்.

—அடியார்க்கடியவன்-கேதாண்டப்பட்டி.

# இந்து சமயத்தில் வேற்றுமையில் ஒற்றுமை

திரு. மா. சீதாராமன் - பெருங்கட்டூர்.

பூவுலகில் நிலவுகின்ற சமயங்கள் தன்னில்
புகழ்மன்னும் தெய்வீகச் சமயமென நின்று
மூவுலகும் போற்றுகின்ற முதன்மையுடைத் தாகி
மூவரது முத்திநெறி பத்திநெறி காட்டி
யாவருக்கும் கடைப்பிடித்தற் கெளிமையுடைத் தென்று
யாகநெறி யோகநெறி என்பனவும் கொண்டு
தேவருக்கு நிகராக நமைவாழச் செய்யும்
திருவுடைய சமயமிந்து சமயமெனும் ஒன்றே!

சைவமெனச் சாற்றிடினும் வைணவமே யெனினும்
ஷண்மதமாய் இவைவிரிந்து நமைஅழைத்துச் செலினும்
பொய்ச்சமயம் போலன்றிப் பொருந்துகின்ற
பூதலத்தில் பெற்றுமிகப் பொலிவுடனே நிற்கும்
தெய்வநெறிச் சமயமிந்து சமயம்போல் வேறு
தெளிவுகொண்டு நிற்குமொரு சமயமுண்டோ சொல்வீர்!
பெய்யுமழை வெள்ளமெலாம் பெருங்கடலே சேரும்
பெற்றியதே போலஅறு சமயமிறை சாரும்!

பிரமனெனப் பெயர்கொண்டு பூதலத்து உயிரைப்
பெருமறையின் நெறிநின்று படைக்கின்ற தேவும்
பரமபத நாதனெனப் பாற்கடலில் துயிலும்
பரந்தாம ஞமுயிரைப் புரக்கின்ற மாலும்
தருமநெறி தரணிதனில் தழைத்தோங்க உயிரைத்
தகவுடனே ஒடுக்கியருள் சங்கரநற் கோவும்
கருதிடிலோ வெவ்வேருய்க் காட்சியளித் தாலும்
ஒருவனென வேவுணர்வர் உண்மையறிந் தோரே!

ஆண்டானுக் கடிமையெனும் நெறிநின்றுன் அனுமன்!
அன்புநிறை தோழமைக்கோர் சான்றுனன் பார்த்தன்!
வேண்டிநலம் விளைக்கின்ற தாய்மைநெறி தன்னில்
ஆயர்குலத் தாயவள்ய சோதையன்று நின்றுள்;
ஆண்டுபல வாழியென வாழ்த்துரைக்கும் தந்தை
ஆகும்நெறி காட்டிநலம் ஊட்டியவர் ஆழ்வார்!
ஆண்டாளோ நாயகியின் நெறியதனில் நின்றுள்!
ஆனநெறி பலவெனினும் அடைந்தஇடம் ஒன்றே

பாசமதை நீக்கிஇறைப் பாதமலர் சேரப்
பாங்குடனே பாரதனில் பரிவுடனே அப்பர்
தாசநெறி நின்றதுவும் தாயினருள் காட்டக்
காழியர்கோன் சற்புத்ர நெறிநின்ற பரிசும்

நேசமுள தோழநெறி நின்றிலங்க அன்று
நின்மலராம் சுந்தரர்தான் நிகழ்த்தியநற் செயலும்
வாசகரின் வாய்மையுள ஞானநெறி தானும்
நான்குநெறி யாயிடினும் நற்குறிக்கோள் ஒன்றே!

நல்லா ரிணக்கமெனும் சங்கவழி பாடும்
எல்லாரும் ஏத்துகின்ற லிங்கவழி பாடும்
வல்லார்க்கே வாய்க்கின்ற ஞானவழி பாடும்
சொல்லாலே வேறெனினும் சுட்டும்பொரு ளொன்றே!

ஒன்றே பலவாய் நிற்கும்நம் சமயம்!
ஒன்றே பலவாய் நிற்கும்நம் தெய்வம்!
ஒன்றே பலவாய் நிற்கும்நம் நெறிகள்!
ஒன்றே பலவாய் நிற்கும்நம் பக்தி!

சிவனென்போம்! மாலென்போம்! சிவசக்தி யென்போம்!
சிவசுப்ர மணியென்போம்! கணபதியே யென்போம்!
புவிமீதில் ஒளிநல்கும் சூரியனே யென்போம்!
போற்றுதலுக் குரியஇவர் புகழ்கூறி நிற்கும்
நவைதீர்ந்த அறுசமய நெறியதனை முன்னுள்
நல்ஞானச் சுடராதி சங்கரர்தான் தந்தார்!
இவையாறும் வெவ்வேருய் இயங்கிடினும் முடிவில்
இறையடியில் ஒன்றுகக் கூடிடுதல் காண்பீர்!

ஆற்றுகின்ற செயலதனை அடிப்படையாய்க் கொண்டு
அன்றொருநாள் பிறந்ததுதான் இன்றிருக்கும் சாதி!
வேற்றுமைகள் சாதியிலே இருந்திட்ட போதும்
விவேகமுடன் ஒன்றுகக் கூடியுழைத் திட்டார்!
போற்றுகின்ற உறுப்புக்கள் ஒன்றுகக் கூடிப்
பூதவுடல் வாழநிதம் உழைப்பதனைப் போல
சாற்றுகின்ற சாதியினுல் சமுதாயம் வாழத்
தோன்றியதில் வேற்றுமைகள் ஏதுமில்லை உண்மை!

வேற்றுமைகள் ஒற்றுமையின் வலிமைக்கே ஆகும்
விந்தைஇந்து சமயநெறி தனிலன்றி வேறு
தோற்றுகின்ற சமயத்தில் காண்போமோ சொல்வீர்!
தொழுதிந்து சமயத்தைச் சாருதற்குப் பாரின்
நாற்றிசையோர் வந்திங்கே நண்ணுகின்றுர் அன்றே!
நாமிந்த உண்மையினை அறிந்திங்கே வாழ்வோம்!
காற்றினிலும் நம்சமய உண்மையைக் கலப்போம்!
கருணைமகான் சங்கரரின் அருள்நெறியில் நிற்போம்!

# மாரியம்மன் வழிபாடு

நம் முன்னோர்கள் இயற்கையோடியைந்த வாழ்வினர். குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் என்ற நால்வகை நில ஒழுக்கமும் பூண்டவர். குறிஞ்சி நில மக்களால் முருகனும், முல்லை மாந்தரால் திருமாலும், மருத நிலக் கிழாரால் தேவர்கோனும், நெய்தல் வாழ்நரால் வருணனும் சிறப்புத் தெய்வமெனக் கொண்டாடப்பட்டனர். அந்நால்வகை நிலமும் தம்மியல்பு திரிந்து கடும் வறட்சியால் நெருப்பென வெம்மை கக்கும் நிலையடைந்தபோது பாலை என்று அழைத்தனர். அப்பாலையில் வழிச்செல்வோரை வருத்திப் பொருள் பறிக்கும் ஆறலைக் கள்வரும், கொடும் வெயிலைத் தாங்கும் மிருகங்களுமே சுற்றித் திரிந்தன. அக்கள்வரால் தம் தொழில் வெற்றி வேண்டி வழிபடப்பட்டவளே கொற்றவை.

கொற்றவை வழிபாடு அவளை வழிபட்டாரைப் போலவே கொடியதாக இருந்தது. நிணமும், கள்ளும் வார்த்து கோரத் தாண்டவமாடிக் கள்வர்கள் களித்ததோடு அவளையும் களிப்படையச் செய்ததாக நினைத்தனர். அதேபோல போர்க்களத்தே போரிட்டு மடிந்த வீரர்களின் இரத்தம் குடித்து மகிழும்பேய்கள் கொற்றவையை வாழ்த்தி நடமிட்ட காட்சிகளை நம் இலக்கியங்களில் காணலாம்.

கொற்றவை அச்சம் தரும் தோற்றத்தைக் கொண்டவள். தம்மை வழிபடும் அன்பர்க்காக எதையும் செய்யத் துணிந்தவள். காலப்போக்கில் இயற்கைச் சக்திகளின் அச்சம் தரும் விளைவுகளிலிருந்து தப்ப பாமர மக்களாலும் கொற்றவை தொழப்பட்டாள். நோய் நொடிகளின்றி வாழ்வதற்கு அவளருள் வேண்டப்பட்டது. புதியதாக ஏதேனும் பெரிய அளவிலான நோய் கிராமப் புறங்களில் பரவத்தலைப்பட்டால் 'சாமி குற்றம்' என்று பெரிதும் அஞ்சப்பட்டது. அப்போதெல்லாம் மக்கள் ஒன்றாகக் கூடி பெரிய அளவில் பூசனைகள் செய்தனர். இவ்வாறாகக் கொடிய கொற்றவையானவள் பாமர மக்களின் கண் கண்ட தெய்வமாக மதிக்கப்பெறத் தொடங்கியதும் மாரியம்மனாக அமைதி தவழும் வடிவம் கொண்டாள். இது மாரியம்மன் வழிபாடு தொடங்கியவிதம் குறித்து ஒரு சாரார் கூறும் கருத்தாகும்.

மற்றொரு சாரார், கண்ணகியே மாரியம்மனாகப் பூசிக்கப்படுகிறாள் என்கின்றனர். கற்புக்கடம் பூண்ட பொற்புடை தெய்வமான அவள் தன் கொழுநன் கோவலனன்றிப் பிற தெய்வம் தொழாத பெற்றியள்; மண்மகளும் கண்டறியாத சீறடிச் சிறப்பினள். அடக்கமே உருவான அவள் வாழ்வு அமைதியாகக் கழியவில்லை. இல்லறத்தைப் பகிர்ந்து கொள்ள மாதவி வந்தாள். அவளோடு போன கோவலன் குலந்தரு பெருஞ்செல்வம் தொலைத்து வறியவனாய் மீண்டான். அப்போதும் கண்ணகி காய்ந்தாளில்லை. கண் பனிக்கும் வகையில் 'சிலம்புள கொண்ம்' எனச் சொல்லி நின்றாள். பிழைப்புத் தேடி மதுரை மாநகர் ஏகினர் இருவரும். கண்ணகியின் ஒற்றைச் சிலம்பு கொண்டு மற்றதை அவளிடமே விடுத்து மதுரை வணிகரிடம் விற்று வரச் செல்கிறான் கோவலன். ஊழ்வினை வந்துறுத்தவே பாண்டிய அரசி கொப்பெருந்தேவியின் சிலம்பினை முன்னரே களவாடிய பொற்கொல்லனது சூழ்ச்சியால் கோவலன் கைச் சிலம்பு களவுப் பொருளெனச் சாற்றப்படுகிறது. ஆராய்ந்தறியத் தவறிய பாண்டியன் நெடுஞ்செழியன் 'கள்வனைக் கொன்று அச்சிலம்பு கொணர்க' என்று ஆணையிடுகிறான். அவ்வாணை வழி கோவலன் கொலையுண்டான். அச்செய்தி கேட்ட கண்ணகி பதறினாள்; கதறினாள்; துடித்தாள்; துவண்டாள். கோப வெந்தணல் மூண்டெழ வெகுண்டாள். பாண்டியன் முன் சென்றாள். 'என் கணவன் கள்வனோ?' என முழங்கினாள். பாண்டியன் கோவலனிடமிருந்து பறித்தச் சிலம்பினை வாங்கி நிலத்திலறைந்து சிதறிய மாணிக்கப் பரல்கள் கொண்டு அது தம் சொந்த சொத்தென நிரூபித்தாள். பிழையுணர்ந்த மன்னன் உயிர் துறந்தான். அவன் மனைவியும் உடன் ஆவி நீத்தாள். கண்ணகியாள் பின்னும் வெஞ்சினம் ஆறாது முலைமுகம் திருகி எறிந்தே மதுரையை எரித்தாள். மதுராபதி தெய்வத்தால், 'பழவினைப் பயனே விளைந்ததனைத்திற்கும் காரணம்' என தெளிவுறுத்தப்பட்டுத் தேறி, சேர நாட்டெல்லையில் ஒரு குன்றின் மீதிருந்த வேங்கை மரத்தடியிலிருந்தாள். பின் தெய்வ வடிவம் பெற்ற கோவலனும், பிற தேவரும் வந்து வரவேற்க விண்ணகம் சென்று சேர்ந்தாள்.

கண்ணகிக்குச் சேரன் செங்குட்டுவன் இமயத்தினின்றும் கல் கொணர்ந்து சிலை வடித்துக் கோயிலெழுப்பி வணங்கினான். வறண்ட தேயத்து மன்னர்கள் கண்ணகி வழிபாடு நடத்த அவர்கள் நாடுகளில் செழிப்பு மீண்டது. அவ்வாறான மழைவளம் வேண்டி நிகழ்த்தப் பெற்ற கண்ணகி தொழுகையே

திரு. வே. சோமசுந்தரம்,
நங்கநல்லூர்.

காலப்போக்கில் மாரியம்மன் வழி பாடாக மருவியது.

பரசுராமனின் தாயும், ஜமதக்கினி முனிவரின் மனைவியுமான ரேணுகா தேவியே மாரியம்மனாக பேசப்படு கிறாள் என்பாரும் உள்ளனர். ஒரு முறை வழக்கம்போல் நீர் கொணரச் சென்ற அவள் நீர் நிலையில் தெரிந்த கந்தர்வன் ஒருவனின் நிழலைக்கண்டு மனம் பேதுற்றாள். அதனை ஞானக் கண்ணால் அறிந்த முனிவர் தம் ஆணைப் படியே தாயென்றும் பாராது தலை வேறு உடல் வேறாக வெட்டி வீழ்த் தினார் பரசுராமர். அதுகண்டு மெச் சிய முனிவரிடம் மீண்டும் தம் தாயை உயிர் பெற்றெழும்படியாகவும், அவளை அகிலத்தார் அனைவரும் தொழும் நிலை அடைய வேண்டு மென்றும் பரசுராமர் வரம் வேண்டிப் பெற்றார். ரேணுகாதேவியின் துண் டிக்கப்பட்ட தலையே மாரியம்மனாக உருக்கொண்டதாகவும், பரசுராமர் வரத்தின்வழி அவள் வழிபடப்படு வதாகவும் அறிகிறோம்.

மாரியம்மன் தோற்றம் பற்றி ஊருக்கு ஊர் ஒவ்வொருவிதமாகப் பேசப்படுவதும் உண்டு. அது எப்படி யிருப்பினும், அவளைத் தொழுதால் நலிவற்ற நல்ல வாழ்வு வாழலாம் என்ற நம்பிக்கை பக்தர்களிடம் நிலைப் பெற்றுள்ளது. ஊர்க்காவல் தெய்வ மாக—வேண்டுவார் வேண்டுவன நல் கும் வேற்கண்ணியாக—நொய்நொடி போக்கும்வேப்பிலைக்காரியாக-கொடி யாரை வேரறுக்கும் பத்ரகாளியாக-வற்றாத மழைவளம் தரும் கருமாரி யாக-எங்கும் நிறைந்த பரம்பொரு ளாக-எல்லாம் ஆக்கும் ஆதிகாரணி யாக - தெய்வங்களுக்கெல்லாம் மேலான ஆதிபராசக்தியாக மாரியம் மன் இன்றும் கிராமப்புறங்களில் கருதப்படுகிறாள்.

மாரியம்மன் கோயில் இல்லாத ஊரைத் தமிழ்நாட்டில் காண்டல் அரிது. அமர்ந்த திருக்கோலத்திலும், உடலற்ற தலை மட்டுமே உள்ள நிலை யிலும் அவள் காட்சி தருகிறாள். தலைக்கு மேலே ஐந்து தலை நாகமும் உண்டு. அங்கமெல்லாம் அழகா பரணங்கள் பூண்ட அவளின் அமர்ந்த திருக்கோலம், காண்பவர் கண்களை மற்றொன்றைக் காணவிடாத எழிற் கோலமாகும். தலை மட்டுமே உள்ள நிலையில் தலையணிகள் பலவும் அணிந்து ஒளிவெள்ளம் பின்புலத்தி லிருக்கவும், ஐந்தலைப்பாம்பு குடை பிடிக்கவும் காட்சி தருகிறாள்.

அவளுக்கென ஏற்பட்டுள்ள பெருங் கோயில்களில் நாள் வழிபாடும், வார வழிபாடும், ஆண்டு விழாவும் மிகச் சிறப்பாக கொண்டாடப்படுகிறது. சிறிய அளவிலான கோயில்களில் ஒவ் வொரு வருடமும் ஆடி மாதத்தில் கிரகமெடுத்து ஊர்வலம் வந்து கூழுற்றி விழா எடுப்பர்.

மாரியம்மன் விழா என்றதுமே ஊரே திரண்டு விடும். ஒவ்வொரு வரும் தம்மாலான காணிக்கைகளை பொருளாகவும், பணமாகவும் வழங் குவர். ஆடி மாதம் பிறந்து விட் டாலே மாரியம்மன் வழிபாடுதான் தமிழகத்தில் மேலோங்கி இருக்கும்.

'காப்பு கட்டுதல்' என்பது விழாவை முன்னின்று நடத்தும் முக் கிய பக்தர்கள் அம்மன் திருவிழா முடியும் வரை வேறு உலக காரியங் களில் ஈடுபடுவதில்லை என்று கங்கணம் கட்டிக் கொள்வதாகும். மஞ்சள் கட்டிய நூலை வலக்கையில் பூசை செய்து அணிந்து கொள்வர். விழா நடந்தேறியதும்தான் 'காப்பு' களை வர்.

விழா தொடக்கத்தில் பம்பை உடுக்கை அடிப்போரால் வர்ணிக்கப் பட்டு அதற்காகவே விரதமிருந்து வரும் ஒரு பக்தரின்மீது மாரியம்மன் சாமி வரவழைக்கப்படுவாள். அவள் சம்மதம் கிடைத்த பிறகே விழா காரி யங்கள் ஆரம்பிக்கப்படும். சாதாரண மாக வெள்ளி, சனி, ஞாயிறு ஆகிய மூன்று நாட்களில் விழா நடை பெறும். வெள்ளியன்று பெண்கள் பொங்கல் படையலிட்டு அம்மனை வழிபடுவர். சனி முழுவதும், மண் ணால் சமைக்கப்பட்ட அம்மனின் திரு வுருவான பதிக்கு பூசனைகள் செய்யப் படும். ஞாயிறன்று விடிகாலையில் முறைப்படி கிரகம் ஜோடித்து, பம்பை உடுக்கை முழங்க, சிலம் பாட்டம் முன்தொடர ஊர்வலம் நடைபெறும். கிரகம் எடுப்போர் அணுவும் பிசகாத விரதம் நோற் றிருத்தல் வேண்டும். ஊர் மக்கள் அவர்களை மாரியம்மனாகவே கருதி வணங்குவர். ஒவ்வொரு வீட்டாரும் கிரக பூசை நடத்தி முடித்ததும் தத்தம் வீடுகளில் வழிபாடு நடத்தி ஏழைகளுக்குக் கூழ் வார்ப்பர். ஊர்வலம் முடிந்து கோயிலுக்குத் திரும்பியதும் முன்னர் சொன்னது போல் சாமி வரவழைக்கப்பட்டு ஏழைகளுக்கு கூழும் அன்னமும் பாலிக்க அம்மனின் சம்மதம் கோரப் படும். அவள் சம்மதம் கிடைத்த வுடன் கூழன்னம் பாலித்தல் நிகழும். அன்றிரவில் அலங்கார வடிவினளான அம்மனின் ஊர்வலமும், கரக ஆட் டம், பொய்க்கால் குதிரை ஆட்டம், கூத்து, நாடகம் போன்ற கலை நிகழ்ச்சிகளும் நடைபெறுவதுண்டு. விழா முடிவிலும் ஊர் பக்தர்கள் எடுத்த விழாவால் 'அம்மன் பூரண திருப்தி அடைந்தாளா?' என்று சாமி வரவழைக்கப்பட்டுக் கேட்டறியப் படும். அவள் திருப்தியடையாவிட் டால் நடைபெற்ற விழாவே பய னற்றுப் போகும். எனவே, விழாவில் நேர்ந்த குற்றங்குறைகளைப் பொருட் படுத்தாமலும், மக்கள் தெரிந்தும் தெரியாமலும் தம் வாழ்வில் இழைத்த பிழை பாவங்களை மன்னித் தும் எல்லாரும் வாழ திருவாக்கு வழங்குமாறு வேண்டி அம்மனின் அருள் வாக்கைப் பெற்று விடுவர். இறுதியில் பதியைக் கலைத்துக் காப்புக் களைவர்.

மாரியம்மனுக்கு விழா எடுக்கா விட்டால் அவள் கோபாவேசமுற்று விடுவாள் என்பது நம்பிக்கை. இறை

யுணர்வை மறந்தால் நாம் அழிவோம் என்பதே இதன் அடிப்படை. 'விழா நடப்பதும் மாரியம்மன் சம்மதம் பெற்றே. விழாவின் ஒவ்வொரு காரியமும் செய்யப்படுவதும் அவள் சம்மதம் பெற்றே' என்பதை நோக்கும்போது 'அவனருளாலே அவன் தாள் வணங்கி......' என்ற மாணிக்க வாசகரின் மணிவாக்கு நினைவுக்கு வருகிறது.

மாரியம்மனுக்கு மிகவும் பிடித்தது வேப்பிலை. அதனை பாவாடையாக இடுப்பில் அணிந்துகொண்டு தரையில் உருண்டவாறே கோயிலை வலம் வந்து வணங்கும் பக்தர்கள் அநேகர். மனநோய் முதலான பலவித நோய்களும் நீங்க வேப்பிலை அடிப்பதை மாரியம்மன் கோயில்களில் காணலாம். கொடிய பாம்பும் அவள் கூட்டுறவால் வணங்கப்படும் நிலைக்கு உயர்ந்துள்ளதை வெள்ளிதோறும் பெண்கள் பாம்பு புற்றுக்குப்பாலூற்றி வணங்குவதால் அறியலாம். பாம்பு, அம்மனின் வடிவே எனக் கருதுவர்.

மாரியம்மன் கற்பின் கனலி. பெண்களின் கண்கண்ட தெய்வம். 'மாரியல்லது காரியமில்லை' என்ற வாக்கியம் 'மாரியம்மனை வணங்காது நிலையில்லை' என்பதற்கும் பொருந்தும். பெண்கள், அவளே கதியென்று நம்பி தவறாது தொழுது வருவதால்தான் நாட்டில் நல்ல மழை பெய்து, நல்வளம் செழித்து, நீதி நேர்மை நிலைத்து, நேரிய வாழ்வு வாழ முடிகிறதென்றால் அது மிகையாகாது.

மாரியம்மன் வழிபாடு நாட்டு வளம் வேண்டி செய்யப் பெறுவது. கூழன்னம் வழங்கும் அறச்செயலைப் போற்றுவது. ஊரே ஒன்று கூடி வணங்கும் சிறப்பால் ஒற்றுமையையும், ஒருமைப்பாட்டினையும் வளர்ப்பது. புராதன கலைகளுக்கு வாழ்வளிப்பது. விஞ்ஞான புதுமைகள் ஆயிரமாயிரம் வந்தாலும் இத்தமிழ் மண்ணோடு கலந்துள்ள ஆன்மீக நம்பிக்கையை அசைக்க முடியாதென்ற உண்மையை மெய்ப்பிப்பது.

மாரியம்மன் வழிபாட்டில் உயிர் பலியிடல் தேவையற்ற ஒன்றே. முன்னாட்களில் ஆடும், கோழியும் அதிக எண்ணிக்கையில் கொல்லப்பட்டன. இப்போதெல்லாம் அது வெகுவாகக் குறைந்துள்ளது; அறவே நீங்குவதே வேண்டப்படுவதாகும். கருணை மழை பொழிபவளான மாரியம்மன் 'இரத்த ஆற்றில் நீந்த விரும்புவாளா?' என்பதை பக்தர்கள் சிந்தித்துப் பார்க்க வேண்டும்.

இறை வழிபாடு பலரால் பலவிதமாகச் செய்யப்படுகிறது. முற்றும் துறந்து முழு நினைவையும் முதற்பொருளிடம் வைத்த ஞானியரும் உண்டு. இறைவனுக்கும், இறையடியாருக்கும் தொண்டு செய்து வழிபடுவாரும் உண்டு. பக்தி மேலீட்டால் ஆடிப்பாடி மெய்மறந்து நிற்போரும் உண்டு. பாமர மக்கள் உலகியலையும் விடாது, இறைவனையும் மறவாது ஒழுகும் பண்பினர். அவர்களிலும் அப்பாவி பாமர மக்கள் வெறும் நம்பிக்கையும், சடங்குமே ஆதாரமாகக் கொண்டு இறையுணர்வு மங்காத வண்ணம் காத்து வருபவர்கள். அத்தகையவர்களின் பக்திக்கனலை வளர்க்கும் அரிய வழிபாடே மாரியம்மன் வழிபாடாகும். அதில் அறிவு பூர்வமாக சிந்திப்பார்க்குப் புலப்படாத சடங்குகளும், கருத்துக்களும் இடம் பெற்றிருக்கலாம். அதற்காக மாரியம்மன் பக்தர்களின் உண்மையான பக்தியைக் குறைவாக மதிப்பிடலாகாது.

அறிவால் அறியப்படாத அரிய பொருளான ஆண்டவனை நெஞ்சக் கசிவால் அடையலாமன்றோ? அவ்வகையில் மாரியம்மன் வழிபாடு நம் நாட்டு பாமர மக்களிடையே நீடித்திருக்கும் என்பதிலும், அவளடியார்களும் ஆன்ம ஈடேற்றம் பெறுவர் என்பதிலும் ஐயமில்லை.



# பெண்ணின் பெருமை

"நீரில்லா நெற்றி பாழ், நெய்யில்லா உண்டிபாழ்
ஆறில்லா ஊருக்கு அழகு பாழ், பாரில் உடன் பிறப்பில்லா உடம்பு பாழ்,
பாழே மனையாளில்லா மனை".

ஒரு கணவன் செய்யும் நற்காரியங்கள் எல்லாவற்றின் பலன்களிலும் (தான தர்மங்கள் புரிதல், கோயில் குளம் செல்லுதல்) அவன் தன் மனைவிக்குப் பாதி பங்கு உண்டு. அது தானாகவே வந்து விடுகிறது. அதேபோல் அவன் செய்யும் கெட்ட காரியங்களின் (பாபங்கள்) பலன்கள் மனைவிக்கு வருவதில்லை. அவை அவனையே சாரும். மேலும் அவன் தன் மனைவி செய்யும் புண்ணிய காரியங்கள் (நல்லக் காரியங்கள்) அவளையே சார்ந்ததாகும். அவளுடைய நற்காரியங்களில் கணவனுக்குக் கொஞ்சமும் பங்கு கிடையாது. ஆனால் அதே சமயம் மனைவி செய்யும் கெட்ட காரியங்களில் (பாபங்களில்) கணவனுக்குப் பாதி வந்துவிடுகிறது. இவற்றின் மூலம் பெண்களின் ஏற்றத்தை நன்கு உணர்ந்து கொள்ளலாம். மேலும் வைதீக மதம் (ஸாஸ்திரத்தில்) பத்தினியில்லாதவன் எந்த ஒரு காரியத்தினையும் செய்யவும் அருகதை அற்றவன் என்று சொல்கிறது. தர்மபத்தினியுடன் சேர்ந்து செய்யும் காரியமே உயர்ந்தது என்று பெரியோர் சொல்வர். இன்னும் பெண்களின் ஏற்றத்தினை சொல்லிக்கொண்டே போகலாம். ஸ்ரீமந் ராமாயணத்திற்குச் சிறை இருந்தவள் ஏற்றம் என்றும், ஸ்ரீ மஹா பாரதத்திற்கு பாஞ்சாலி சபதம் என்றே பெயரிட்டார்கள் பெரியோர். இதன் மூலமும் பெண்களின் ஏற்றம்புலனாகிறது.

—அடியார்க்கடியவன்-கேதாண்டப்பட்டி.

(16-ம் பக்கத் தொடர்ச்சி)

சிறிதும் பெரிதுமான நூற்றுக்கும் மேலான நூல்களைச் சமஸ்கிருதத்திலும் பிராகிருதத்திலும், தமிழிலும், மணிப்பிரவாள நடையிலும் இவர் இயற்றியுள்ளார். இவருடைய மும்மணிக் கோவை முதலான பதினெட்டு நூல்களின் திறத்தினை 'தேசிகப் பிரபந்தம்' எனப் போற்றுவர்.

**பிள்ளை லோகாசாரியர் :**

இதே காலத்தில் பிள்ளை லோகாசாரியர் வாழ்ந்தவராவர். இவர் வைணவ சமயக் கருத்துகளுக்கு ஆக்கமும் ஊக்கமும் அளித்துள்ளார். இராமானுசரின் தத்துவக் கோட்பாட்டு அடிப்படையில் வளர்ந்த வைணவத்தை, 'ஸ்ரீ வைஷ்ணவம்' என்பர். அக்கோட்பாட்டைத் தெளிவுறுத்துவதற்கு 'ஸ்ரீ வசன பூஷணம்' எனும் நூலை இவர் இயற்றியுள்ளார். இதுவரை 'ரகசியங்கள்' என்று முன்னோர்களால் போற்றப்பட்ட மறைப் பொருள்களை விளக்கும் வசனங்கள் நிறைய இந்த நூலில் இடம் பெற்றுள்ளன. தத்துவத்திரையம், மும்முட்சுப்படி என்னும் நூல்களும் இவரால் இயற்றப்பட்டுள்ளன.

**ஆசாரிய இருதயம் :**

பிள்ளை லோகாசாரியரின் தம்பி அழகிய மணவாளப் பெருமாள் நம்மாழ்வாரின் இதயத்தை வெளிப்படுத்தும் வகையில், 'ஆசாரிய இருதயம்' எனும் நூலினைப் படைத்துள்ளார். இந்நூல் தத்துவ உலகிற்குப் பல நுட்பங்களை நம்மாழ்வாரின் பாடல்களில் பொருத்திக் காட்டுகிறது. நாலாயிர திவ்ய பிரபந்தத்தின் பிழிவாக இந்நூல் விளங்குகிறது.

**தமிழ் நாட்டு வைணவத்தில் பிளவு :**

நாதமுனிகள் காலத்திலேயே வைதிகப் பழமைப் பற்றுளர்கள், திவ்வியப் பிரபந்தத்தை பிரமாண நூலாக ஏற்க மறுத்தனர். பக்தி நெறியைப் போதிப்பதால் பிரபந்தம் வேள்வி நெறியைப்போற்றும் வேதங்களுக்கு மாறுபட்டது என்று அவர்கள் கருதினர். இதனால்தான் பாஞ்சராத்திர ஆகமத்தையும் இவர்கள் வெறுத்தனர். ஆனால் நாதமுனிகள், ஆளவந்தார், இராமானுசர் ஆகிய மூவரும் தக்க அடிப்படையில் ஆழ்வார்களின் பக்தி நெறியை நிலை நாட்ட அரும்பாடு பட்டனர்.

காலப் போக்கில் சமஸ்கிருதம் வழி வைணவச் சமயத்தை வளர்த்தவர்களுக்கும் தமிழ் மொழி வழி வைணவத்தை வளர்த்தவர்களுக்கும் இடையே பூசலும் மோதலும் உண்டாயின. வேதாந்த தேசிகரின் வழி வந்தவருக்கும் பிள்ளை லோகாசாரியர் வழி வந்தவருக்கும் இடையே உண்டான கருத்து வேற்றுமை வைணவத்தில் வடகலை, தென்கலை எனும் பிரிவுகளைத் தோற்றுவித்தது. வேதாந்த தேசிகரின் சீடர்கள் சமஸ்கிருத நூல்களுக்கு முக்கியத்துவம் கொடுத்து வடகலை நெறியை உருவாக்கினர்.

பிள்ளை லோகாசாரியரும் அவருடைய இளவலான அழகிய மணவாளப் பெருமாளும் நாலாயிர திவ்யப் பிரபந்தத்தை 'திராவிட வேதமாக'ப் போற்றியதன் விளைவாக 'தென் கலை' நெறி தோன்றியது என்பர்.

இருதிற நெறிகளுக்கு இடையே நடைமுறையில் பல வேறுபாடுகள் தோன்றின. இவற்றால், தமிழ் நாட்டு வைணவத்தில் உண்டான பிளவு விரிந்து கொண்டே போனது. இவற்றிடையே உண்டான வேற்றுமைகளை அறிஞர்கள் நன்கு விளக்கியுள்ளனர். (N. Subbu Reddiar, Religion and Philosophy of Nalayaram, with special reference to Nammalvar. pp. 781-795).

**மணவாள மாமுனிகள் :**

பிள்ளை லோகாசாரியரின் சீடரே மணவாள மாமுனிகள். தென்னாட்டு ஆழ்வார் திருநகரியில் தோன்றியவர். தென்கலை வைணவ நெறியல் இயல்பாகவே இவர் ஈடுபாடு கொண்டார். தமிழ் நாட்டு ஆசாரிய பரம்பரையில் இறுதியாக வந்தவர் (கி. பி. *1379-1443*) என்று இவரைப் போற்றுவர். திருவாய் மொழி 'திராவிட வேத சாரம்' என்றும், 'உபநிடதங்களுக்கு ஒப்பானவை' என்றும் இவர் அறுதியிட்டுக் கூறினர். (வேதாந்த தேசிகரும் திருவாய் மொழியை 'திராவிட உபநிஷதம்' என்று போற்றியுள்ளார்) தமிழ்ப் பிரபந்தங்களைக் கொண்டு இறைவனிடம் சரணாகதி அடைந்து யாவரும் வீடு பேற்றை அடையலாம் என்னும் கொள்கையை நாடு முழுவதிலும் இவர் பரப்பினர்.

ஸ்ரீவசன பூசனம், ஆசார்ய இருதயம், சப்த காதை போன்ற நூல்களுக்கு சிறப்புமிகு வியாக்கியானங்களை இவர் எழுதி வைணவ சமயத்திற்குப் பெரு வாழ்வு அளித்தார்.

தமிழ் நாட்டு வைணவ சமயத்தின் முப்பெரும் ஆசாரியர்களாக நம்மாழ்வார், இராமானுசர், மணவாள மாமுனிகள் போற்றப்படுகின்றனர். முதன் முதற் பெரும் தலைவர் ஆன நம்மாழ்வார் மீது 'திருவாய் மொழி நூற்றந்தாதி' எனும் நூலையும், இடையாசாரியரான இராமநுசர் மீது 'ஆர்த்திப் பிரபந்தத்தையும்' மணவாள மாமுனிகள் இயற்றியுள்ளார்.

தென்கலை வைணவம், மணவாள மாமுனிகளின் அரும்பணியால் வலிவும், பொலிவும் பெற்று, தமிழ் நாட்டு மக்களிடையே திருமால் வழிபாட்டினை ஆற்றல் மிக்க நெறியாக விளக்குமாறு செய்துள்ளது.

மணவாள மாமுனிகளுக்குப் பிறகு வைணவத் தமிழ் நூலான பாரதம் அஷ்டப் பிரபந்தம் சிற்றிலக்கியங்கள் போன்ற நூல்கள் தோன்றியுள்ளனவே ஒழிய, சமயப் பணி ஓர் இயக்கமாக வளர்ச்சியுறவில்லை.

இந்நூற்றாண்டில் இயற்றப்பட்ட பாரதியாரின் கண்ணன் பாட்டிலும் கண்ணதாசரின் 'கிருஷ்ண கானத்திலும்' அ. கி. வாலம் அம்மையாரின் 'மோகன முரளி' போன்ற நூல்களிலும் வடநாட்டில் தோன்றிய அஸ்ஸாமிய, வங்காள, குஜராத்திய, மராட்டிய வைணவ சமயங்களின் கிளை நெறிகளின் தாக்கத்தைக் காணுகின்றோம். அவற்றில் 'பிரேம பக்தி' விஞ்சி நிற்கிறது.

தமிழ் நாட்டில் வைணவம் குறிப்பிட்ட ஒரு நில மக்களின் வீரவழிபாட்டு நெறியாகத் தோன்றியது; பைய வளர்ந்து திருமாலியமாக மலர்ந்தது; ஆழ்வார்கள் காலத்தில் பக்தி இயக்கமாக மாறி, மக்களின் வீடுகளைத் தேடிச் சென்றது; ஆசார்யர்களால், வலுவான தத்துவ அடிப்படையைப் பெற்றது; 'சரணாகதி' தத்துவமே இறைவனை அடைய எளிய வழி; சிறந்த வழி என்பதை உலகிற்கு உணர்த்தியது. பிறகு இரு கிளைகளாகப் பிரிந்து சமஸ்கிருத, தமிழ் வைணவ மரபுகளைப் பேணிக் காத்து வருகிறது.

முற்றும்.

# அஞ்சனை திருக்குமரன்

முடிவை முத்து,
கோவில்பட்டி.



" மதுராந்தகம் ஸ்ரீ தேவி "
முகமண்டபத்தில் சிறிய திருவடி

இராம தூதனாகிய ஆஞ்சநேயனின் தந்தை வாயுபகவான் என்பதும், தாய் அஞ்சனாதேவி என்பதும் இலக்கியங்களும், இதிகாசங்களும் நமக்குக் கூறுவனவாகும்.

அஞ்சனாதேவி வானுலகப் பெண்ணாக இருந்து வந்தாள். அங்கே அவளுக்கு ஏற்பட்ட ஒரு சாபத்தால் மண்ணுலகில் வானர மங்கையாக வந்து பிறந்து அஞ்சனை என்ற பெயருடன் வாழ்ந்து வந்தாள்.

அவ்வமயம் உலகத்து உயிர்களை எல்லாம் உய்வித்து எங்கும் நிறைந்திருக்கும் வாயுபகவான் அஞ்சனா தேவியைக் கண்ணுற்றான். அவளது பேரழகில் மயங்கி அவள் மீது காதல் கொண்டான். அதுகாண் அவளிடம் சென்று, அவளுடைய அன்புக்குப் பாத்திரமானான். அவளும் அவனிடம் மயங்கி தன்னை ஒப்படைத்தாள்.

அஞ்சனை தன்நிலை மீள நடந்ததை எண்ணி வருந்தினாள். அது கண்ட வாயு பகவான் அஞ்சனையிடம் "பெண்ணே! நடந்ததை எண்ணி வருந்தாதே. உனக்கு அழகும், அறிவும், வீரமும், ஞானமும் கொண்ட ஒரு மகன் பிறப்பான். அவனால் அவனி மக்கள் சுகம் பெறுவர். நீயும் புகழ் அடைவாய்" எனக் கூறி மறைந்தான்.

வாயு பகவான் கூறியதுபோல அஞ்சனையின் வயிற்றில் ஆஞ்சநேயன் பிறந்தான். இளமையிலேயே வீரமும், விவேகமும் கொண்டு விளங்கினான். மலைச்சிகரங்களில் தாவிக்குதித்தான். மரங்களை வேரோடு பிடுங்கி எறிந்தான்.

அன்று சூரியகிரண நாள். காலையில் கதிரவன் தன் சிவந்த மேனியை வையம் காட்டினான். வல்லமைமிக்க ஆஞ்சனேயன் கதிரோனை சிவந்த பழமெனக் கருதி, தான் கொள்ளும் நோக்குடன் வானத்தே எழுந்து கீழ் திசை நோக்கி வேகமாகப் பறந்து சென்றான்.

அதுபோழ்து ஏற்கனவே சூரியனைப் பிடிப்பதற்காகச் சென்று கொண்டிருந்த இராகுபகவானை முந்திச் சென்றான் ஆஞ்சநேயன். அது கண்ட இராகு பகவான் கலங்கினான். இந்திரனிடம் சென்று தன் தொழிலுக்கு ஏற்படவிருக்கும் குறைவினைக் கூறி ஆஞ்சநேயனைத் தடுத்து நிறுத்த வேண்டினான்.

இந்திரனும் உடன் புறப்பட்டு வான் மண்டலம் வந்து ஆஞ்சநேயனைக் கண்டான். அவனுக்கு கதிரோனின் அருகில் செல்லவிருப்பதால் வரும் ஆபத்தை உணர்ந்து அவனைக் காப்பாற்றும் பொருட்டு அவன் மீது தன் கையில் வைத்திருந்த வச்சிராயுதத்தை வீசினான். இந்திரனின் வச்சிராயுதம் ஆஞ்சநேயனின் தாடையை மட்டும் தாக்கித் திரும்பியது. தாக்குதலுக்கு உள்ளான ஆஞ்சநேயன் பேரொலி எழுப்பி, மயங்கி, தன் வனத்தே வந்து கீழே விழுந்தான்.

பேரொலி கேட்டு அஞ்சனாதேவியும், வானர வீரர்களும் ஆஞ்சநேயனின் அருகில் ஓடி வந்தனர். மயங்கிக் கிடக்கும் தன் மகனைக் கண்டு கதறி அழுதாள் அஞ்சனை. அதற்குள் இந்திரனும் அங்கு வந்து சேர்ந்து நடந்ததைக் கூறி 'அஞ்சனை! அழாதே!! உன் மகன், இறந்துவிடவில்லை; அவனுக்கு இறப்பும் கிடையாது. இன்னும் சிறிது நேரத்தில் எழுந்து விடுவான்" எனக் கூறி மறைந்தான்.

இந்திரன் கூறியபடியே ஆஞ்சநேயன் சிறிது நேரத்தில் மயக்கம் தெளிந்து தூங்கி எழுபவனைப்போல எழுந்தான். சுற்றி நின்ற அனைவரும் வியந்து இந்திரனையும், ஆஞ்சநேயனையும் புகழ்ந்தனர். அஞ்சனை அவனை அரவணைத்து 'அனுமன்! அனுமன்!!' என அழைத்தாள்.

இந்திரனின் வச்சிராயுதம் தாக்கியதால் ஆஞ்சநேயனின் தாடை சுருங்கிப் போயிற்று. தாடை சுருங்கிய காரணத்தால் ஆஞ்சநேயனுக்கு அனுமன் என்ற பெயர் உண்டாயிற்று. அனுமன் என்றால் "வற்றிய கன்னம் உடையவன்" என்று வழங்கப்படும் பொருள் இதனைச் சான்று பகர்வதாக அமைந்துள்ளது.

அவன் அவனே! இராம தூதனாக, இராம பக்தனாக, இராம நாமத்தின் பொருள் விளம்பும், இராமபிரானின் புகழ்பரப்பும் சிரஞ்சீவியாக வாழ்ந்து கொண்டிருக்கின்றான்; என்றும் வாழ்ந்து கொண்டிருப்பான்.

அவனை நினைந்து, அவனைப் புகழ்ந்து, அவனை வணங்க அடையலாம் பலப்பல. அவனுக்கு,

"நமஸ்தே சதா ப்ரம்மசர்யாய துப்யம்
நமஸ்தே சதா வாயு புத்ராய துப்யம்
நமஸ்தே சதா பிங்களாக்ஷாய துப்யம்
நமஸ்தே சதா ராம பக்தாய துப்யம்"

என நமஸ்காரங்கள் தினம் தினம் நூறாக, ஆயிரமாக, லட்சமாக, கோடியாக, கோடானு கோடியாக செய்யுங்கள். அதனையே நெஞ்சினில் நிலை நிறுத்தி மகிழுங்கள்; பின் மன உறுதியினையும், உடல் வலிமையையும் அடைவீர்கள்.



# அருளாளப் பெருமாள் எம்பெருமானார்

இராமானுஜரின் பல சீடர்களான கூரத்தாழ்வார், எம்பார், முதலியாண்டான் என வரும் வரிசையில் ஒருவரான அருளாளப்பெருமாள் எம்பெருமானாரைப் பற்றி இக்கட்டுரையில் காண்போம்.

யக்ஞமூர்த்தி என்ற பெயருடன் மாயாவாதி சந்நியாசி ஒருவர் (அத்துவைதி) வேதாந்த விஷயங்களிலே மிக வல்லவராய் காசியில் திகழ்ந்து வந்தார். அச்சமயம் திருவரங்கத்தில் இராமானுஜர் வேதாந்த விஷயங்களில் ஈடுபட்டு எல்லோருக்கும் தினமும் உபதேசம் செய்து வந்தார். யக்ஞமூர்த்தி இதை அறிந்தவுடன் தானும் அவருடன் வாதாட வேண்டுமென்று அவாக்கொண்டு காசியிலிருந்து திருவரங்கத்திற்கு எழுந்தருளினார். அவர் அதுவரை எழுதிய புத்தகங்களை ஒரு வண்டியில் போட்டுக் கொண்டு வந்தார்.

திரு. தி. வி. பார்த்தசாரதி,
காஞ்சிபுரம்.

திருவரங்கத்தில் தன்னுடைய சீடர்களுடன் ஒரு மடத்தை ஏற்படுத்திக் கொண்டு இருந்தார். பிறகு ஒரு நாள் இராமானுஜரைச் சந்தித்து, தன்னை அறிமுகப்படுத்திக் கொண்டு வேதாந்த விஷயங்களைப் பற்றி 18 நாட்கள் வாதம் செய்யலாமா என்று கேட்டார். இராமானுஜரும் இதற்கு ஒப்புக் கொண்டார். முதலில் யக்ஞமூர்த்தி இராமானுஜரை நோக்கி, 'நீர் இவ்வாதத்தில் தோற்றால் என்ன செய்வீர்கள்' என்று கேட்டார். அதற்கு இராமானுஜர், 'நான் தோற்றால் ஸ்ரீபாஷ்யத்திற்கு உரை எழுதுவதை நிறுத்திக் கொள்ளுகிறேன்' என்று கூறினார். உடனே யக்ஞமூர்த்தி, "நான் தோற்றால் தங்களுக்குச் சீடனாகி, வைணவத் துறவியாக ஆகி விடுகிறேன்" என்று கூறினார்.

17 நாட்கள் வாதம் நடந்தது. இருவருக்கும் வெற்றி தோல்வி இல்லாமல் வாதம் நடந்தது. 17ம் நாள் யக்ஞமூர்த்தி கேட்ட கேள்விக்கு இராமானுஜரால் விடை அளிக்க இயலவில்லை. மறுநாள் அதாவது இறுதி நாளான 18ஆம் நாள் விடை அளிப்பதாகச் சொல்லி தன் மடத்திற்குச் சென்று விட்டார். அன்றிரவு தன்னுடைய தெய்வமான, ஆராதனைக்குரியவனை பேரருளாளனை வணங்கி, உணவருந்தாமல், வருத்தத்துடன் 'யக்ஞமூர்த்தியின் கேள்விக்கு பதில் சொல்ல முடியாமல் போய்விட்டதே, நான் என்ன செய்வது' என்று விண்ணப்பம் செய்து கொண்டார். கனவிலே பேரருளாளன் தோன்றி, மாயாவாதிக்குக் (யக்ஞமூர்த்தி) தக்க விடை கொடுக்க விஷயங்களை எடுத்துச் சொன்னார்.

மறுநாள் காலை இராமானுஜர் மிக்க மகிழ்ச்சியுடன் யக்ஞமூர்த்தியை அழைத்து வரச் செய்தார். யக்ஞமூர்த்தி இராமானுஜரைக் கண்டதும், 'உம்மையும், பகவானையும் ஒன்றாகவே பார்க்கிறேன்; தேவரீருக்குப் பேரருளாளன் கிருபை புரிந்துள்ளான்; ஆகையால் நான் தங்களுடன் வாதம் செய்ய இயலாதவனாகி விட்டேன்' என்று சொல்லி இராமானுஜரை வணங்கி தன்னுடைய ஏக தண்டத்தை முறித்துவிட்டு, திரி தண்டத்தை ஏற்றுக் கொண்டார். அன்று முதல் யக்ஞமூர்த்திக்கு அருளாளப் பெருமாள் எம்பெருமானார் என்று பெயரிட்டார் இராமானுஜர் (அருளாளன் கிருபையாலும் எம்பெருமானார் என்ற பெயர் சேர்ந்ததாலும் இப்பெயர் ஏற்பட்டது.)

அன்று முதல் இராமானுஜர் அருளாளப் பெருமாள் எம்பெருமானாருக்காக ஒரு மடம் ஏற்படுத்தி தன்னை அணுகி வரும் சீடர்களுக்கு 'சமாஸ்ரயணம்' (இலச்சினை) செய்யுமாறு ஆணையிட்டார். வருபவர்கள் இரண்டு எம்பெருமானார்களில் அருளாளப் பெருமாள் எம்பெருமானாரிடமே வந்து இலச்சினை பெற்றார்கள். 'குருவி கழுத்தில் பனங்காயைக் கட்டினாற்போல்' எனக்குச் சுமையாகி விட்டதே என்று எண்ணி அருளாளப் பெருமாள் எம்பெருமானார் தன் மடத்தைவிட்டு விட்டு இராமானுஜரின் மடத்திற்கே வந்து திருவாராதன கைங்கரியத்தைச் செயது வந்தார்.

இவர் விஞ்சமூர் என்ற ஊரில் கார்த்திகை மாதம் பரணி நன்னாளில் பிறந்தார். இவரது விக்கிரகம் காஞ்சிபுரத்தில் நான்கு ஆழ்வார்களால் பாடப்பெற்ற 108 வைணவத் தலங்களில் ஒன்றான 'திருப்பாடக'த்தில் எழுந்தருளப்பட்டிருக்கிறது. ஒவ்வொரு வருடமும் கார்த்திகை மாதம் பரணி திருநட்சத்திரத்தின்போது சாற்றுமுறை நடந்து வருகிறது.

அருளாளப் பெருமாள் எம்பெருமானார் ஞான ஸாரம், ப்ரமேய ஸாரம் ஆகிய இரண்டு பிரபந்தங்களை இயற்றியருளினார். இவை வெண்பாக்களால் ஆனவையாகும்.

**திருநட்சத்திர தனியன் :**

கார்த்திகே பரணீஜாதம் யதீந்த்ராச்ரித
மாஸ்ரயே |
ஞான ப்ரமேய ஸாராபி வக்தாரம்
வரதம் முநிம் ||

**நித்திய தனியன் :**

ஞான பக்த்யாதி வைராக்கியம்
ராமானுஜ பதாச்ரிதம் |
பஞ்சமோபாய ஸம்பந்தம் ஸம்ய
மீந்த்ரம் நமாம்யஹம் |

*

(8-ம் பககத் தொடர்ச்சி)

எனவும், காஷ்டை 30 கொண்டது ஒரு கலை எனவும், கலை முப்பது கொண்டது ஒரு முகூர்த்தம் எனவும், முகூர்த்தம் 30 கொண்டது ஒரு நாள் என ஒரு வாய்ப்பாடும், 6 பிராணன் கொண்டது ஓர் பலை எனவும், 6 பலை கொண்டது ஓர் கடிகை எனவும், கடிகை 2½ கொண்டது ஓர் ஓரை எனவும், ஓரை 24 கொண்டது நாள் என மற்றோர் வாய்ப்பாடும் இந்துக்களுள் (பெரும்பான்மை தமிழ் நாட்டில்) வழங்கப்படுகின்றது.

இந்துக்களால் நாளுக்கு மேலே கொள்ளப்படும் பிரிவுகள்: 7 நாள் கொண்டது 1 வாரம். 15 நாட்கள் கொண்டது ஒரு பக்ஷம். பக்ஷம் இரண்டு கொண்டது, ஒரு மாதம். 365¼ நாள் கொண்டது ஒரு சௌரமான வருடம். சௌரமான வருடம் 2 கொண்டது ஓர் ருது; ருது 3 கொண்டது ஓர் அயனம். ருது 6 கொண்டது ஒரு வருடம். இவற்றுள் ருதுக்களாவன: சித்திரை வைகாசி வசந்த ருது = இளவேனில்; ஆனி, ஆடி கிருஷ்ம ருது—முதுவேனில்; ஆவணி புரட்டாசி வருஷ ருது = கார்; ஐப்பசி, கார்த்திகை சர ருது—கூதிர்; மார்கழி, தை ஹேமந்த ருது—முன்பனி; மாசி பங்குனி சிசிர ருது—பின் பனி முதலியவைகளாம். ஐரோப்பியரின் கொள்கைப்படி ருது நான்காகும். அவையாவன: வசந்த காலம், கோடை காலம், கார் காலம், மழைக் காலம் என்பவைகளாம்.

அயனம் உத்தராயணம், தக்ஷிணாயணம் என இரு வகைப்படும். சூரியன் மகராயனத்தில் (தை முதல் 6 மாதம் உத்தராயணம் என்னும் கொள்கை முன்னோர் காலத்துக்குச் சரியாம். தற்காலத்தில் ஆட்சேபமுடைத்து) பிரவேச முதல் கடகாயனப் பிரவேசம் வரையுமுள்ள காலம் உத்தராயணம் எனவும், கடகாயனப் பிரவேசம் முதல் மகராயனப் பிரவேசம் வரையுமுள்ள காலம் தக்ஷிணாயணம் எனவும் பெயர் பெறும்.

## விண்ணப்பம்

திருப்பதியிலுள்ள திருமலை திருப்பதி தேவஸ்தானத்தின் தங்கு வசதிகளுக்காக முன்கூட்டியே செய்து கொள்ளும் இட ஒதுக்கீடுகளுக்கான தொகையினை எம். ஒ. மூலம் அனுப்புதல் கூடாது. அத்தொகைக்கான வங்கி காசோலையை 'உதவி செயலாட்சித் தலைவர் (வரவேற்பு) தி. தி. தேவஸ்தானம், திருப்பதி' அல்லது 'செயலாட்சித் தலைவர், தி. தி. தேவஸ்தானம் திருப்பதி' எனும் பெயரில் எடுக்கப்பட்டு, வருகை புரியும் நாள், வரும் நபர்களின் எண்ணிக்கை ஆகியவை கொண்ட முழுத் தகவல்களுடன் கூடிய கடிதத்துடன் (ஆங்கிலத்தில்) அனுப்புதல் வேண்டும்.

செயலாட்சித் தலைவர்,
தி. தி. தேவஸ்தானம், திருப்பதி.

தேவர்களுக்கு உத்தராயணம் பகலும் தக்ஷிணாயணம் இரவுமாகும். மனுஷ வருடம் 360 கொண்டது ஒரு தேவ வருடம். தேவவருடம் 12000 கொண்டது ஓர் சதுர்யுகம்.

சதுர்யுகங்களாவன:

| யுகம் | தேவ வருஷம் | மனுஷவருஷம் |
|---|---|---|
| கிருதயுகம் | 4800 | 1,728000 |
| திரேதயுகம் | 3600 | 1,296000 |
| துவாபரயுகம் | 2400 | 86400 |
| கலியுகம் | 1200 | 432000 |
| சதுர்யுகம் | 12000 | 4,320,000 |

இங்கு ஒவ்வொரு யுகத்துக்கும் தேவ வருடமாகக் காட்டிய தொகைகளின் 4-ம் தானத்திலிருப்பனவாகிய 4,3,2,1 என்னும் எண்களையே பௌராணிகர் அவ்வவ்யுகங்களில் நடைபெறும் தர்மத்தின் கால்களெனப்பர்.

இனி ஒரு சதுர்யுகம் ஒரு தேவயுகமாம். 71 தேவயுகம் (606,720,000 சௌரமான வருஷம்) ஒரு மன்வந்தரமாம். இந்திராயுக் காலமும் அவ்வளவினதே. ஆயிரம் தேவயுகம் அதாவது 4320,000,000 சௌரமான வருஷம் கொண்டது ஒரு கல்பமாம். இது ஒரு பிரம்மப்பகலாம். ஒரு பிரம்மப்பகலிலே பதினான்கு மன்வந்தரங்களுள. ஆறு தேவயுகம் சேடமாம். பின்னும் ஆயிரம் தேவயுகம் திரும்பினால் பிரம்மனுக்கு ஒரு ராத்திரியாம். ஆகவே இரண்டாயிரம் தேவயுகம் ஒரு பிரம தினமாம். முந்நூற்றறுபது பிரம தினம் ஒரு பிரம வருடமாம். நூறு பிரம வருடம் ஒரு பிரமாயுக்காலம். பிரமாயுக் காலம் இரண்டு கூடினால் விட்டுணு தினமாம். விட்டுணு தினம் முந்நூற்றறுபது கூடினால் விட்டுணு வருஷமாம். விட்டுணு வருஷம் நூறு கூடினால் விட்டுணு வாயுக்காலம். விட்டுணு வாயுக்காலம் இரண்டு கூடின் உருத்திர வருஷம். உருத்திர வருஷம் பரார்த்தங்கூடின், உருத்திராயுக் காலமாம். உருத்திராயுக்காலம் இரண்டு கூடின் ஈசுவர தினமாம். ஈசுவர தினம் முந்நூற்றறுபது கூடின் ஈசுவர வருஷமாம். ஈசுவர வருஷம் பரார்த்தங்கூடின், ஈசுவராயுக்காலமாம். ஈசுவராயுக்காலம் இரண்டு கூடின் சதாசிவ தினமாம். சதாசிவ தினம் முந்நூற்றறுபது கூடின் சதாசிவ வருஷமாம்.

இன்றைக்கு 5000 வருடங்களுக்கு முன் பூமி சிருட்டிக்கப்பட்டது எனக் கூறும் மேலை நாட்டினரின் கொள்கையை கட்டுக்கதைக் (miths) கொள்கை எனக் கூறுவர். பேராசிரியர் பிக்கறிங்லாட், கெல்வின் சேர், நோமன் லொக்கீர் முதலிய மேலை நாட்டு சாஸ்திர விற்பன்னர்கள் பூமியின் உற்பத்திக் காலத்தையும் நாச

காலத்தையும் பற்றிக் கூறப்புகுந்து ஈற்றில் முடிவுவரை கூறாது தயக்க முற்றனர்.

எத்தனையோ ஐயாயிரம் ஆண்டுகளுக்கு முன் பூமி உற்பத்தி ஆனது என்பது இவர்களது கொள்கை. சூரிய சித்தாந்தப்படி சிருஷ்டியாதி வருஷம் 1955885023 அபிஜத்து நக்ஷத்திரத்துக் கடுக்க இருப்பதும் க்ஷயமடைந்து ஒளி குன்றி வருவது மான ஓர் பிரம்மாண்ட வஸ்துவானது, ரவி சமஸ்தானத்தை (solar system) நோக்கி வருகின்றது. இது பூமியைத் தாக்கச் சுமார் 43000 வருடங்கள் செல்லும் எனவும் கூறுகின்றார்கள். இக்கால முடிவானது இக் கலியுகாந்த சந்தியாயிருப்பதாலும், யுக சந்திகளில் பிரளயம் முதலியன உண்டாகும் என இந்தியர்களின் சாஸ்திர சம்மதமாயிருத்தலினாலும் மேற்கண்ட கூற்று உண்மையாயிருப்பினும் இருக்கும்.

இனி இந்தியரும், கிரேக்கரும், வேறு சிலரும் சூரியோதயத்தையும், இத்தாலியரும், பொஹீமியரும், வேறு சிலரும் சூரியாஸ்தமனத்தையும், ஆங்கிலேயர் அர்த்தராத்திரியையும் நாட்பிறப்பாகக் கொள்ளுவர். ஆங்கிலேயர் இரவு பன்னிரண்டு மணி முதல் பகல் பன்னிரண்டு மணிவரையுமுள்ள காலத்தை அந்த நாளின் (a.m.) (antimeridum) முற்பாக நேரமாகவும், பகல் பன்னிரண்டு மணி முதல் இரவு 12 மணி வரையுள்ள காலத்தை (p.m.) (postmeridum) பிற்பாக நேரமாகவும் கொள்வர். அவர்களுள் ஜோதிடர்கள் பகல் 12 மணியையே நாளின் அந்தமும் ஆதியுமாக வைத்து 1 மணி, 2 மணி, 10 மணி, 13 மணி, 19 மணி, 24 மணி என எண்ணி நாளைக் கணக்கிடுவார்கள். ஆனால் இவ்விதக் கொள்கையானது வான சாஸ்திர விஷயத்திற்கு மாத்திரமேயாம். லௌகிக விஷயத்துக்காயின் முற்காட்டிய விதமே கொள்வர். நாளை முற்பாகம், பிற்பாகமாக ஆங்கிலேயர் பிரித்துக் கொண்டவாறே இந்தியரும் சமமாயும் அன்னமாயும் பிரித்துக் கொண்டார்கள்.

★

---

(7-ஆம் பக்கத் தொடர்ச்சி)

திருக்கண்ணபுரம் பற்றிய பாசுரத்தின் (8.8:1)

வானோர் அளவும் முதுமுந்நீர்
வளர்ந்த காலம் வலியுருவில்
மீனாய் வந்து வியந்துய்யக்
கொண்ட தண்தா மரைக்கண்ணன்

[வானோர்—தேவர்; முதுமுந்நீர் — கடல்; வளர்ந்த — பரந்து சென்ற; வலிஉருவின்—வலிமை கொண்ட வடிவையுடைய; வந்து—திருவவதரித்து; வியந்து - ஆச்சரியப்படும்படியாக; உய்யக் கொண்ட - பிழைப் பித்தருளின]

இரண்டடிகளில் எம்பெருமானின் மச்சாவதாரத்தில் ஈடுபட்டுப் பேசுகின்றார். இன்னும் திருநிறையூர்ப் பற்றிய பிறிதொரு பாசுரத்தில் (6.8:2)

முந்நீரை முன்னாள்
கடைந்தானை மூழ்த்தநாள்
அந்நீரை மீனாய்
அமைந்த பெருமானை

[முந்நீர்—கடல்; முன் நாள்-முன்பொரு காலத்தில்; மூழ்த்த நாள்-பிரளயம் கொண்ட காலத்தில்; அமைத்த-அடக்கின]

என்றும், திருக்கண்ணங்குடிப் பாசுரமொன்றில் (9.1:3)

வாதைவந் தடர, வானமும் நிலமும்
மலைகளும் அலைகடல் குளிப்ப
மீதுகொண்டுகளும் மீனுரு வாகி
விரிபுனல் வரியகட் டொளித்தோன்

[வாதை - துன்பம்; அடர - அதிகரிக்க; குளிப்ப - அமுழ்ந்திவிட; மீது கொண்டு-தன்மீது ஏறிட்டுக்கொண்டு உகளும் - களிப்புடன் உலாவுகின்ற; வரி அகடு-அழகிய செலுவிலே; ஒளித்தோன்-அடக்கின எம்பெருமான்]

என்றும் இந்த அவதாரத்தை அநுசந்தித்து மகிழ்வதைக் காணலாம். இவையாவும் இந்த அவதாரத்தைத் தனியாக அநுசந்திக்கும் பாசுரங்களாகும்.

இந்த ஆழ்வார் இந்த அவதாரத்தைப் பிற அவதாரங்களுடன் கலந்தும் அநுபவிப்பதையும் கண்டு மகிழலாம். திருவிட எந்தைப் பாசுரத்தில் (2.7:10) "அன்னமும் மீனும் ஆமையும் அரியும் ஆய எம் மாயனே!" என்றும்; திருநாங்கூர்த் திருமணிக் கூடப் பாசுரத்தில் (4.5:6) "கெண்டையும் குறளும் புள்ளும் கேழலும் அரியும் மாவும், அண்டமும் சுடரும் அல்லா ஆற்றலும் ஆய எந்தை" என்றும்; திருவரங்கம் பாசுரமொன்றில் (5.4:8) "ஏனம் மீன் ஆமையோடு அரியும் சிறு குறளும் ஆய், தானும் ஆய தரணித் தலைவன்" என்றும், திருவழுந்தூர்ப் பாசுரமொன்றில் (7.8;10) "பன்றியாய் மீன் ஆகி அரி ஆய்ப் பாரை படைத்து காத்து உண்டு உமிழ்ந்த பரமன் தன்னை" என்றும்; திருக்கண்ணபுரம் பாசுரமொன்றில் (8.4:4) "நீர் மலிகின்றதோர் மீனாய் ஓர் ஆமையுமாய் சீர்மலிகின்றதோர் சிங்க உருவாகி, கார்மலி வண்ணன் கண்ணபுரத்தெம் பெருமான்" என்றும் பல பாசுரங்களில் இந்த அவதாரத்தைப் பிற அவதாரங்களுடன் கலந்து மகிழ்வதைக் காண்க.

★

# ஸ்ரீ நடன கோபால நாயகி ஸ்வாமிகள்-ஓர் அறிமுகம்

ஸ்ரீமத் ப்ரஹ்ம குலாப்தி சந்த்ர மமலம்
ஜாபாலி கோத்ரோத்பவம்
ஸ்ரீ ரங்கார்ய ஸுதம் புதாதி விநுதம்
பக்த்யாதி யோகான்விதம்
ஸ்ரீ ஸௌராஷ்ட்ர ஸுபாஷயா கவி
க்ருதம் வேதாந்த சிலப்ரதம்
ஸ்ரீராமாப்ஜ பதா ஸ்ரிதம் ஸ்ரீ கிருஷ்ண
நாயக்கம் ஸததம் பஜாமி.

(ஸௌராஷ்ட்ர) ப்ராஹ்மண குலத்திற்கு குற்றமற்ற சந்திரன் போன்றவரும், ஜாபாலி கோத்ரத்தில் உதித்தவரும், ஸ்ரீ ரெங்கார்யருக்கும் ஸ்ரீ லக்ஷ்மிக்கும் புத்திரரும், பக்தி, ப்ரபத்தி மற்றும் ஆசார்யாபிமானத்தில் ஊன்றியவரும், அழகிய ஸௌராஷ்ட்ர மொழியில் கவிதைகளை இயற்றியவரும், வேதாந்த சிலரும், ராமபத்ரர் எனும் இயற்பெயரும் (நடன கோபால நாயகி) எனும் தாஸ்ய நாமத்தை உடையவரும் ஆகிய ந்ருத்த கோபால நாயகியை எப்பொழுதும் பஜிக்கிறேன்).

திருமலை திருப்பதி தேவஸ்தானத்தில் "அன்னமய்யா ஓர் அறிமுகம்" எனும் நூல் வெளியிடப்பட்டுள்ளது. ஸ்ரீ அன்னமய்யாவைப் போலவே "ஸ்ரீ நடனகோபாலநாயகி" ஸ்வாமியும் ஸௌராஷ்ட்ர பாஷையிலும், தமிழிலும் ஆயிரக்கணக்கில் கீர்த்தனைகளை இயற்றியுள்ளார். ஆயினும் சில நூறு கீர்த்தனைகளே இப்பொழுது நமக்குக் கிடைக்கிறது. இப்பொழுது நமக்குக் கிடைக்கும் கீர்த்தனைகளை நல்ல முறையில் வெளியிட்ட பெருமை மதுரை அன்பர் திரு. சி. எம். வி. கிருஷ்ணமாச்சாரி அவர்களையே சாரும்.

நாயகி ஸ்வாமிகளின் வாழ்க்கை குறிப்பு :

"கோழியும் கூடலும்" என மங்கை மன்னனால் மங்களாசாசனம் செய்யப்பட்டதும், "வேதத்திற்கு ஓமென்னு மதுபோல்" திகழும் பெரியாழ்வாருடைய திருப்பல்லாண்டு அவதரித்த ஸ்தலமும் திருவேங்கடவனின் அவதாரங்களில் முதலாவதாகிய "மத்ஸ்ய" அவதாரம் செய்த கிருதமாலா நதியும், வேகவதி எனப்படும் வைகை நதியும் பாய்ந்து உபய காவேரி வாஸனை போல் கூடலழகர் கோயில் கொண்டுள்ள மதுரை மாநகரில் ஸௌராஷ்ட்ர விப்ர குலத்தில் ஜாபாலி கோத்ரரான ஸ்ரீ ரெங்கார்யருக்கும், ஸ்ரீ லெக்ஷ்மி அம்மாளுக்கும் புத்ரராக உதித்தவர் இம்மஹான். யஜுர் வேதம், ஆப்ஸ்தம்ப ஸூத்ரம் ஜாபாலி கோத்ரம் மற்றும் "கொப்பான்" எனும் புனைப்பெயர் பூண்ட சின்னக்கொண்டா (வீட்டுப் பெயர்) குடும்பத்தில் 1843-ம் வருடம் மார்கழி மாதம் மிருகசீர்ஷ நட்சத்திரத்தில் அவதரித்து "கொப்பான்" சாமியார் என்று அன்புடன் அழைக்கப்பட்டார்.

பாலப்பருவம் பெரும்பாலும் கும்பகோணத்தில்தான் கழிந்தது. பள்ளிப் படிப்பில் இவர் நாட்டம் செல்லவில்லை. எனவே குடும்பத் தொழிலான நெசவிலே கபீர் தாஸரைப் போல ஈடுபடுத்தப்பட்டார். கபீர் தாஸர் 2 அல்லது 3 மாதத்தில் ஒரு சேலை நெய்தார் எனக் குறிப்பிடப் பட்டுள்ளது. நாயகி ஸ்வாமிகள் கபீர்தாஸருக்கும் அண்ணனாகத் திகழ்ந்தார். காரணம் ஸதா ஸர்வ காலமும் பகவத் சிந்தனம்தான்.

திரு. ஆர். வி. ஸ்ரீதர ராமாநுஜன்,
சென்னை.

நெசவுத் தொழிலில் சேலையில் பூக்கள் மற்றும் பார்டர் விழுவதற்காக "நெருடுதல்" எனும் ஒரு வேலை உண்டு. அவ்வேலை இவர் செய்யும் போது "மொந்து தொ:வி ஸந்தி தேவுக் து அந்தி" எனப் பாடியுள்ளார். (மனம் வைத்து நெருடு; தேவனை நீ அடை என்பதே இதன் பொருள்) இவர் எப்போதும் பித்தரைப் போல் பகவத் சிந்தையில் இருப்பதை மாற்ற நினைத்த இவர் அன்னை

## இராமனும் தவளையும்

ஸ்ரீ ராமபிரான் வனவாசத்தில் இருந்தபோது காட்டின் வழியாகப் போய்க்கொண்டிருந்தார். ஒரு நாள் அவர் தமது வில்லையும் அம்பையும் தரையில் நட்டுவிட்டு பம்பை என்னும் குளத்தில் நீர் அருந்துவதற்காக இறங்கினர். மீண்டும் அவர் கரையேறி வந்தபோது தம் வில் ஒரு தவளையை ஊடுருவிச் சென்று துளைத்திருப்பதைப் பார்த்தார். தவளையின் உடல் முழுவதும் இரத்தத்தால் நனைந்திருந்தது. இதைக் கண்ட ஸ்ரீராமபிரான் பெரிதும் மனம் வருந்தினர். சொல்லொணாத் துயரம் உள்ளத்தை வருத்த அவர், "ஏ தவளையே! நீ ஏதாவது கொஞ்சம் சப்தம் செய்திருக்கக் கூடாதா? அப்போது நீ இங்கிருப்பது எனக்குத் தெரிந்திருக்கும். உனக்கும் இந்தக் கதி வந்திருக்காதே" என்று தவளையிடம் கேட்டார்.

அதற்குத் தவளை பதில் சொன்னது: "ராமா! எனக்கு ஏதாவது ஆபத்து நேரும் போது, 'ராமா! என்னைக் காப்பாற்று' என்று நான் சொல்லி உன்னைச் சரணடைகிறேன். ஆனல் இப்போது நீயே என்னைக் கொல்லும் போதுநான் யாரிடம் சொல்லி முறையிடுவேன்?"

ஸ்ரீ ராமகிருஷ்ணர் கதையிலிருந்து தொகுத்து அனுப்பியவர்.

திருமதி. கமலா மாரியப்பன்.

யார் கல்யாணம் செய்து கொள் என வற்புறுத்த, இவர் அப்போதே "நொக்கோ அம்பொ மொகொ ஹொராடு" (கல்யாணம் எனக்கு வேண்டாமம்மா) என்று திருமணம் வேண்டாம் என்பதற்காகப் பல காரணங்களைக் கூறி ஒரு கீர்த்தனம் பாடியுள்ளார்.

தம்முடைய 12-வது வயதிலேயே உலக வாழ்க்கையில் விரக்தியுற்று கும்பகோணத்தில் இருந்து சொல்லிக் கொள்ளாமல் வந்து மதுரைக்கு அருகில் உள்ள பரங்குன்றின் அடிவாரத்தில் குகையில் எட்டிக்காய், சோற்றுக் கற்றாழை முதலியவற்றையே புசித்து 12 வருட காலம் தவம் புரிய "ஸ்கந்த தர்சனம்" கிடைக்கப் பெற்று முருகனுடைய ஆணைப்படி பரமக்குடிக்கு சென்று "நாகலிங்க அடிகள்" என்பவரை சந்தித்து அவரிடத்தில் யோகாப்யாஸம் பயின்று அதிலே சித்தியும் அடைந்தார். அவ்வமயம் இவர்பெற்ற அநுபவங்களைப் பலகீர்த்தனங்களாகப் பாடியுள்ளார். இவ்வாறு ராம பத்ரர் "ஸதாநந்த" சித்தர் ஆனார். இது திருமழிசைப் பிரானை நினைவூட்டுகிறது. யோகியாய்விட்ட இவரை "யோகியர் தலைவரான" கண்ணன் தென் திசையில் இவரை இழுக்க ஸ்ரீ நம்மாழ்வார் அவதரித்த திருக்குருக்கூரை நோக்கிப் பயணமானார்.

ஆழ்வார் திருநகரியில் அப்போது எழுந்தருளி இருந்த ஸ்ரீமத் வேதமார்க ப்ரதிஷ்டாபன ஆசார்ய உபய வேதாந்த ப்ரவர்த்தகரான வடபத்ரார்யர் எனும் ஆசார்ய புருஷரை ஆஸ்ரயித்து ஸ்ரீ வைஷ்ண மரபின்படி பஞ்ச ஸம்ஸ்காரங்களும் அவரால் சாதிக்கப் பெற்று "சதானந்த சித்தர்" "நடன கோபால நாயகி" ஆனார்.

"தாஸ: புண்டரஸ் ததோ நாம" எனும் ஸ்லோகத்தின்படி "நடன கோபால நாயகி" எனும் தாஸ்ய நாமம் இவருக்கு ஆசார்யரால் இடப்பட்டது என்பதை "ஜல்லரை ஜல்லெரெ மொன்னு" எனத் தொடங்கும் ஸௌராஷ்ட்ர மொழிக் கீர்த்தனையில் தெரிவிக்கிறார். கீர்த்தனையைப் பார்ப்போமா?

ஸஹானு ராகம்) (ஆதிதாளம்

**கண்ணிகள்**

ஜல்லெரெ ஜல்லெரெ மொன்னு நமம்
மெல்லரெ ஹரி பதால் தெல்லெரெ
ஜில்லுவாய் (ஜல்)

ஆழ்வார் ஸ்தோத்ரு காரி நம்மாழ்
வார் ஸ்தோத்ரு
பாப் மூள் ஸெர ஜாய் பரமபதமுக்
வாடோ:ய் (ஜல்)

மணவாள மாமுனி குருவுக் தாஸொ
யெதிஸ்
மாயா தோனும் மத்தி ஹன்வாயி ஏ
(ஜல்)

ரா்மாநுஜா மேநி ஸ்ரீமதே ராமாநுஜா
ரி:யெ
காமக்ரோதாதி குண்ணுனு கடை
ஐயாய் ஏ (ஜல்)

ஸீதா ராமுஸ் தேவு அம்ரெ ஸீதா
ராமுஸ் தேவு தெப்போ
கீதாசார்யு ப்ஙகிரேஸ் கெநி நா: ஏ
(ஜல்)

வடபத்ராசார்யு மொக நாவ்
நடன கோபால நாயகி மென் கலெஸ்
(ஜல்)

இதன் மொழி பெயர்ப்பு

1. உணர்ந்து கொள் உணர்ந்து கொள் மனமே! நாமத்தைச் சொல், ஹரியின் பதங்களைப் பிடித்துக் கொள் வாழலாம் (உணர்).

2. ஆழ்வார் ஸ்தோத்ரம் செய்–நம்மாழ்வார் ஸ்தோத்ரம் பாபங்களை வேரோடு அறுக்கும்–பரமபதத்திற்கு வழி கிடைக்கும் (உணர்).

3. மணவாள மாமுனி குருவின் தாஸன் ஆனால்தான் மாயையின் வாயில் மண்ணை போடலாம் இதனை (உணர்).

4. "ராமாநுஜா" என்று சொல். 'ஸ்ரீமதே ராமாநுஜா' என்றால் உள்ள உள்ள காமக்ரோதாதி குணங்கள் வேரறும். இதனை (உணர்).

5. ஸீதாராமனே பரம்பொருள். நம் ஸீதாராமனே தேவன் இதனை கீதாசார்யன் முன்பு சொன்னான், கதையல்ல (உணர்).

6. வடபத்ராசார்யர் எனக்கு (தாஸ்ய) நாமம் நடன கோபால நாயகி என்று வைத்தார் (உணர்).

வேதம், ஸ்மிருதி, இதிஹாஸம், புராணங்கள், ஆழ்வார்களுடைய அருளிச் செயல்கள் இவற்றைத் தழுவியே இவருடைய பாடல்கள் அமைந்துள்ளன.

ஆழ்வார்களுடைய பாசுரங்களை தழுவியே அன்னமைய்யாவும் வேங்கடவன் மீது தெலுங்கில் பாடியுள்ளார். ஆழ்வார்களுடைய பாரங்களையும், நடன கோபால நாயகி ஸ்வாமிகளின் கீர்த்தனங்களையும் அன்னமய்யாவின் தெலுங்கு கீர்த்தனைகளையும் ஒப்பு நோக்குவதன் மூலம் வேங்கடவனின் பெருமைகளை வெளியிட ஒரு வாய்ப்பு ஏற்படும்.

ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர்
திருவடிவடிகளே சரணம்



## சந்தாதாரர்களுக்கு....

30-6-89—ஆம் தேதியுடன் முடிவடையும் ஸப்தகிரி சந்தாதாரர்களின் எண்கள் கீழே கொடுக்கப்பட்டுள்ளன. சந்தாவைப் புதுப்பித்துக்கொள்ளும்போது, தங்கள் சந்தா எண்களைக் கண்டிப்பாகக் குறிப்பிடவும். 'ஆசிரியர்' ஸப்தகிரி, தி.தி.தே. திருப்பதி. எனும் முகவரியுடன் ஆங்கிலத்தில் தொடர்பு கொள்ளவும்.

36 50 138 179 195 196 200 203 215 253 311 313 326 331 337 343 537 698 702 703 705 706 711 910 1605 1620 1642 1644 1651 1653 1685 1690 3027 3040 3048 3051 3057 3060 3064 3065 3068 3072 3074 3077 3085 3097 3098 3100 3105 3106 3114 3116 3118 3124 3125 3131 4358 4359 4360 4362 முதல் 4368 4370 முதல் 4373 4375 4376 4379 4380 4383 முதல் 4396 4398 முதல் 4414

(4-ம் பக்கத் தொடர்ச்சி)

சென்னையைச் சார்ந்த குமாரி. சிந்தூரியின் பரத நாட்டிய நிகழ்ச்சியும் நடைபெற்றது.

ஃ ஃ ஃ

நினைவு நாள் விழா :

தாள்ளபாக்கம் ஸ்ரீ அன்னமாச்சார்யாவின் 486-ஆவது நினைவு நாள் விழா வழக்கம் போல் இவ்வாண்டும் திருப்பதி ஸ்ரீ அன்னமாச்சார்யா கலா மந்திரத்தில் வெகு விமர்சையாக 3-4-89 முதல் 9-4-89 வரை கொண்டாடப்பட்டது. 3-4-89 அன்று காலை ஸ்ரீ அன்னமாச்சார்யாவின் திருவுருவப் படத்தினைத் தாங்கிய ஊர் வலம் ஒன்று நகரின் முக்கிய வீதிகளில் மேற்கொள்ளப்பட்டது. இவ் நினைவு நாள் நிகழ்ச்சிகளுக்கு வருகை புரிந்தோரை, அன்னமாச்சார்யா திட்டத்துறையின் ஒத்திசைவாளர் டாக்டர். மேடசானி மோகன் அவர்கள் வரவேற்றார். விழாவிற்கு தி. தி. தே. உதவி செயலாட்சித் தலைவர் திரு. சிஎச். வெங்கடபதி ராஜு அவர்கள் தலைமை வகிக்க, திருவேங்கடவன் பல்கலைக் கழகத் துணைவேந்தர் பேராசிரியர். எஸ். வி. ஜே. லக்ஷ்மண் அவர்கள் சிறப்பு விருந்தினராகப் பங்கேற்றார். அவர்தம் சிறப்புரையில் தெலுங்கு மொழி இலக்கியத்திற்கும், பக்தி உலகத்திற்கும் அன்னமய்யா ஆற்றிய பங்கு உன்னதமானது என்பதை பல மேற்கோள் காட்டி விளக்கினார். அதற்கு முன்பு ஸ்ரீ அன்னமாச்சார்யா வமிசத்தைச் சார்ந்த இருவருக்குச் செயலாட்சித் தலைவர் பொன்னாடைப் போர்த்திக் கௌரவித்தார். அன்று மாலையும், மற்றும் 9-4-89 வரை காலையிலும் மாலையிலும் அன்னமய்யா இலக்கியம் மற்றும் இசை பற்றிய உரைக்கோவைகளும், திருமதி. சாருமதி ராமச்சந்திரன், குமாரி. துவாரம் விஜயலட்சுமி, திருமதி. எஸ். சாரதா, திருவாளர்கள் சந்தியா வந்தனம் ஸ்ரீநிவாசராவ், ஜி. பாலகிருஷ்ண பிரஸாத், எம். சுதாகர் மற்றும் பல கலைஞர்கள் பங்கேற்ற இசை நிகழ்ச்சிகளும் நடைபெற்றன.

இறுதி நாள் நிகழ்ச்சிகளுக்கு ஐக்கிய நாடுகளின் அமைப்பில் பெரும் பங்கு வகித்த திரு. சி. வி. நரசிம்மன், ஐ. சி. எஸ். அவர்கள் சிறப்பு விருந்தினராகப் பங்கேற்றார். ஆந்திர மாநில அறநிலையத்துறை அமைச்சர். திரு. கே. அப்பல நாயுடு அவர்கள் விழா நிகழ்ச்சிகளுக்குத் தலைமை வகித்தார். அதுபோது அன்னமய்யா பாடல்களைக் கொண்ட ஒலி நாடாக்கள் வெளியிடப்பட்டன. தி. தி. தே. பொறுப்பாண்மைக் குழு உறுப்பினர் திரு. எல். வி. ராமய்யா அவர்களும் இவ்விழாவில் பங்கேற்றார்.

ஃ ஃ ஃ

மற்றுமொரு கோயில் :

ஆந்திர மாநிலம் சித்தூர் மாவட்டத்தில் கார்வேட்டுநகர் எனும் கிராமத்திலுள்ள சரித்திரச் சிறப்பும், புராணப் பெருமையும் கொண்ட ஸ்ரீ வேணு கோபால சுவாமி கோயில் 10-4-89 அன்று தி. தி. தேவஸ் தானத்தாரிடம் ஒப்படைக்கப்பட்டது. இது சம்பந்தமான விழா ஒன்று கோயில் வளாகத்தில் நடைபெற்றது. கோயில் வளாகத்தினுள் இக் கோயிலைப் பற்றிய செய்திகளைத் தாங்கிய கற்பலகையினை ஆந்திர மாநில அறநிலையத்துறை அமைச்சர் திரு. கே. அப்பல நாயுடு அவர்கள் திறந்து வைத்தார். பின்னர் கோயிலின் முக்கிய சாவிகளை அக்கோயிலின் செயலாட்சித் தலைவர் திரு. பாண்டுரங்கையா அவர்கள் தி. தி. தே. செயலாட்சித் தலைவரிடம் ஒப்படைத்தார். கோயில்களைப் பழுது பார்க்கும் பணிக்காக ஆண்டு ஒன்றிற்காக தி. தி. தே. ஒதுக்கியிருக்கும் கோயில் நிதியான ரூ. 1 கோடியை ரூ. 2 கோடியாக உயர்த்த வேண்டும் என்று அமைச்சரவர்கள் தம்முரையில் குறிப்பிட்டார். இவ்விழாவிற்கு ஆந்திர மாநில சுகாதார அமைச்சர் திரு. பி. சுப்பையா, முன்னாள் அமைச்சர் திரு. கால முத்துகிருஷ்ணம நாயுடு, தெலுங்கு தேசம் கட்சி செயற் உறுப்பினர் திரு. பி. சந்திர பாபு நாயுடு ஆகியோரும் வருகை புரிந்து உரையாற்றினர்.

ஃ ஃ ஃ

தங்கம், வெள்ளி விற்பனை :

திருமலைக் கோயில் உண்டியலில் காணிக்கைகளாக யாத்திரிகள் பலர் தங்கம் மற்றும் வெள்ளி ஆபரணங்களைச் செலுத்துவது வழக்கம். இவ் வகையில் தேவஸ்தானத்திற்குச் சேரும் நகைகளிலிருந்து, தான் விற்கும் தங்கம் மற்றும் வெள்ளி பதக்கங்களுக்கென்று சிறிது தங்கம் மற்றும் வெள்ளி வைத்துக் கொண்டு, மீதியைப் பொது மக்கள் ஏலத்தில் தேவஸ்தானம் ஒவ்வொரு ஆண்டும் விற்றுவிடும். இத்தகு விற்பனை மூலமாக 87-88 ஆண்டில் ரூ. 1·74 கோடியும், 88-89இல் ரூ. 2.25 கோடியும் கிடைக்கப் பெற்றன. இம்முறையில் இவ்வாண்டு ரூ. 1.85 கோடி வருமானம் வரும் என்று தி. தி. தே. எதிர்பார்க்கிறது.

ஃ ஃ ஃ

வருமானம் :

1989-90ஆம் ஆண்டில் தி. தி. தேவஸ்தானத்தின் வருமானம் ரூ. 88.80 கோடி இருக்குமென்று எதிர்பார்க்கப்படுகிறது. இது 1988-89 ஆண்டைவிட ரூ. 16.60 கோடி அதிகமாகும். அதாவது உண்டி மூலமாக ரூ. 27.70 கோடியும், தன்னுடைய மூலதனத்தின் மூலமாக கிடைக்கக் கூடிய வட்டித் தொகை ரூ. 23.37 கோடியும், மேற்கூறிய வருமானத்தில் அடங்கும். மேலும் லட்டு விற்பனை மூலமாக ரூ. 9.3 கோடியும், சிறப்பு நுழைவு டிக்கெட் விற்பனை மூலமாக ரூ. 6.24 கோடியும் 89-90 ஆண்டில் எதிர்பார்க்கப்படுகிறது. மேலும் ஆர்ஜித சேவைகளின் மூலமாக இந்த நிதியாண்டின்போது ரூ. 6.9 கோடி கிடைக்கப் பெறலாம் என்பது

மேலாண்மையின் எதிர்பார்ப்பாகும். இவ்வருமானத்தொகையிலிருந்து நிருவாகப் பணிகளுக்கு ரூ. 20.89 கோடியும், ரூ. 12.52 கோடி லட்டு பிரஸாதம் தயாரிப்பதற்காகவும், தேவஸ்தான 5000 ஊழியர்களுக்கான ஊதியத்திற்காக ரூ. 12-17 கோடியும் ஒதுக்கப்படும். மேலும் வருமானத்திலிருந்து ரூ. 14.32 கோடி சமூக நல கடன்களுக்காக ஒதுக்கப்படும். பொதுவாக ரூ. 42 இலட்சம் உபரி வருவாயாக இவ்வாண்டு வரவு செலவுத் திட்டம் அமையும் என்று எதிர்பார்க்கப்படுகிறது.

ஃ ஃ ஃ

**தமிழ் வருடப் பிறப்பு :**

தமிழ் வருடப்பிறப்பு நாளான 14-4-89 அன்று தமிழ் நாட்டிலிருந்து பல்லாயிரக்கணக்கான பக்தர்கள் திருமலைக்கு வருகை புரிந்தனர். சுமார் 42,854 யாத்திரிகர்கள் தர்ம தரிசனம் வரிசை வழியாகவும், சுமார் 11,854 யாத்திரிகர்கள் சிறப்பு நுழைவு வழியாகவும் கோயிலுக்குச் சென்று இறைவனைத் தரிசித்தனர். வருடப்பிறப்பு நாள் உள்ளிட்டு மூன்று நாட்களின்போது கோயில் வருமானம் ரூ. 45 இலட்சமாகும். இதில் உண்டி மூலமாக ரூ. 21 இலட்சமும், லட்டு விற்பனை மூலமாக ரூ. 11 இலட்சமும், ரூ. 25/- சிறப்பு நுழைவு டிக்கெட் விற்பனை மூலமாக ரூ. 13 இலட்சமும் பெற்றது இதில் அடங்கும்.

ஃ ஃ ஃ

**திருமலைக்கு :**

இந்தியத் துணைக் குடியரசுத் தலைவர் டாக்டர். சங்கர் தயாள் சர்மா அவர்கள் தம் துணைவியாருடன் 7-4-89 அன்று திருமலைக்கு வருகை புரிந்தார். அன்று நடைபெற்ற வெள்ளிக் கிழமை அபிஷேகத்திலும் கலந்து கொண்டார். அன்று மாலை திருமலையில் பெங்களூர் ஸ்ரீநிவாசா அறக்கட்டளையினரால் ஏற்பாடு செய்யப்பட்ட விழாவில் கலந்து கொண்டார். இதுபோது அவ்அறக் கட்டளையினரால் கட்டப்பட்ட 'ஸ்ரீநிவாசாநிலையம்' எனும் காட்டேஜினை அவர்கள் சார்பாக தி. தி. தேவஸ்தானத்தார் வசம் ஒப்படைத்தார். இது சம்பந்தமாக ஏற்பாடு செய்யப்பட்ட விழாவிற்கு கர்னாடக மாநில ஆளுநர் திரு. பி. வெங்கட சுப்பைய்யா, மாநில முதல்வர். திரு. எஸ். ஆர். பொம்மை, ஆந்திர மாநில சுகாதார அமைச்சர் டாக்டர். பி. சுப்பைய்யா மற்றும் பல தேவஸ்தான உயர் அலுவலர்களும் வருகை புரிந்தனர்.

ஃ ஃ ஃ

16-4-89 அன்று இந்திய பாராளு மன்றத்தின் துணைத் தலைவர் திரு. தம்பி துரை அவர்கள் திருமலைக்கு வருகை புரிந்து இறைவனைத் தரிசித்தார்.

ஃ ஃ ஃ

ஆந்திர மாநிலத்தின் சித்தூர் மாவட்டத்தில் வேப்பஞ்சேரி கிராமத்திலுள்ள ஸ்ரீ லக்ஷ்மிநாராயணசுவாமி கோயிலின் சுக்ல வருட பிரம்மோத்சவம் 20-4-89 முதல் 23-4-89 வரை வெகு சிறப்பாக நடைபெற்றது. இந்நாட்களின்போது உத்சவர் சேஷ வாகனம், அனுமந்த வாகனம், கருட வாகனம் ஆகியவற்றில் திருவீதி திருவலம் மேற்கொண்டு வந்தது கண்ணுக்கும் கருத்திற்கும் பெரு விருந்தாக அமைந்தது. 23-4-89 அன்று பகல் இறைவனுக்குத் திருக்கல்யாண உத்சவம் வெகு விமர்சையாக நடைபெற்றது. ஏராளமான பக்தர்கள் ரூ. 116/- செலுத்தி இவ்வுத்சவத்தில் பங்கேற்றனர். இந்நாட்களின்போது கோயில் அரங்கிற்குள் இன்னிசைக் கச்சேரிகள் மற்றும் ஹரிகதை நிகழ்ச்சிகளும் நடைபெற்றன.

ஃ ஃ ஃ

**வருந்துகிறோம் :**

தி. தி. தேவஸ்தான அச்சுக் கூடத்தில் ஏட்டுக் கட்டிடப் பணித்துறையில் சுமார் 25 ஆண்டுகளாக பணி புரிந்து, 'தொழிலாளர் மேன் முறையாளராக' பதவி வகித்து வந்த திரு. எம். கங்குல் செட்டி அவர்கள் 15-3-89 அன்று காலமானார். அன்னாரைப் பிரிந்து துயருறும் அவர்தம் குடும்பத்தாருக்கு எங்களது ஆழ்ந்த வருத்தங்களைத் தெரிவித்துக் கொள்கின்றோம்.

(ஆ-ர்.)

(3-ம் பக்கத் தொடர்ச்சி)

நமக்கு பரம்பொருளின் உண்மையை வேதத்தின் சாரத்தைத் தன் பாக்கள் மூலம் விளக்கி, மற்றைய ஆழ்வார்களைத் தன் அவயமாகக் கொண்டு விளங்கிய 'நம்' ஆழ்வார், வைணவ உலகத்தில் ஒரு மறுமலர்ச்சியினை உண்டாக்கிய ஒரு புனிதராவார். வேத இலக்கியங்களுக்கு அருமையான விளக்கம் தந்து, வைணவத்தை பாமரர்களுக்கு அறிமுகப்படுத்திய, இந்திய மண்ணின் முதல் சீர்திருத்தவாதியான ஸ்ரீ ராமானுஜரை இமமண் பெற்றது நாம் பெற்ற பாக்கியமாகும். கலியுகப் பதியான அவ்வேங்கடவனை, அப்பரமனின் தத்துவ உண்மைகளை எளிய சொற்களில் வடித்து, இசையில் தோய்த்து, பாமரனும் உணர்ந்து, தெளிந்து பணிந்தேத்தும் வகையில் பாக்கள் பல புனைந்து, கீர்த்தனைமூலம் கிரியின் கீர்த்தியைப் பரப்பிய அவ்அன்னமய்யா ஆந்திரம் அளித்த மற்றுமொரு ஆழ்வாராவார்.

சமய வழியில் வாழ்க்கை விதிகளை தம் மதியால் கூறிட்ட இப்பெரியோர்களின் திருஅவதார திருநாட்கள் எனும் ஜெயந்தி விழாக்களை, வாழ்க்கையில் வந்து போகும் சாதாரண நிகழ்ச்சிகளாக நாம் இன்னமும் கருதிக் கொண்டால், நம் பிறவியைக் கண்டு, ஊர்வனவும் நடப்பனவும்கூட நகைக்கும்.

EDITED AND PUBLISHED ON BEHALF OF THE T. T. DEVASTHANAMS BY K. SUBBA RAO, M.A. AND PRINTED AT T. T. D. PRESS BY M. VIJAYAKUMAR REDDY MANAGER, T. T. D. PRESS, TIRUPATI-517501.

